உ

குருவே துணை

8-3

29

# வைராக்கிய சதகம்




ஆசிரியர்

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்

உரையாசிரியர்

போரூர், தவத்திரு. சிதம்பரசுவாமிகள்

1981

வைராக்கிய சதகம்
மூன்றும் பதிப்பு, 1981

வெளியீடு :
பேரூராதீனம்
பேரூர் (அஞ்சல்)
கோயமுத்தூர்
641010

விலை ரூ. 5.00

கதிரவன் அச்சகம்
கெனுல்கரை சாலை, இந்திரா நகர்,
சென்னை-600020.

8-3

உ
குருவே துணை

# பதிப்புரை

"வைராக்கிய சதகம்" என்னும் இந்நூல் நமது குரு முதல்வராகிய தவத்திரு சாந்தலிங்க அடிகளால் அருளிச் செய்யப்பட்ட நான்கு நூல்களுள் ஒன்று. இது சாத்திரம், தோத்திரம் என இரு பகுதியாய் இயல்வது. சுவாமிகள் இந்நூலை அறிவிற்கும் மனத்திற்கும் இடையே நடந்த உரையாடலாக அமைத்திருக்கின்றார்கள். அறிவு, உலகப் பொருள்களின் வழி ஓடுகின்ற மனத்தை விளித்துப் பல ஏதுக்கள் காட்டி உலகப் பொருள்களின்மேல் வைத்த பற்றினை விட்டு இறைவன் திருவடியையே பற்ற வேண்டும் என்று வற்புறுத்திக் கூறுகின்றது. அறிவு கூறுவனவற்றிற் கெல்லாம் மனம் வினாத் தொடுக்கிறது. அதற்குத் தக்க விடையினையும் - எடுத்துக் காட்டினையும் அறிவு எடுத்துக் கூறுகிறது. இவ்வினா விடைகளைத் தவத்திரு சிதம்பர சுவாமிகள் வெகு அழகாக - சுவையாக அமைத்து உரை எழுதியிருக்கின்றார்கள். இவ்வுரையுடன் இந்நூல் இப்பொழுது நமது திருமடத்தின் வெளியீடாக வெளிவருகின்றது. அன்பர்கள் ஓதிப் பயன்பெறுவார்களாக.

அன்பன்,
சாந்தலிங்க இராமசாமியடிகள்
பேரூராதீனம்

உ

# வைராக்கிய சதகம்

---

## கணபதி வணக்கம்

முக்கண் இறை தருகரியை முன் நடத்திப் பின் அதன் தாள்
பக்கம்மறைந் தேகுநர்வெம் பாச[1] இகல் நாசமுற
மிக்க[2] அமர் விளைத்திளையா வீரரெனப் [3] பூரணவூர்ப்
புக்கிணையில் [4] பராநந்தப் பூவையையும் மேவுவரால்

## சபாபதி வணக்கம்

அம்பல வாணன் அடியிணை தொழுவார்க்(கு)
இன்பமும் வீடும் எளிதினில் வருமே.

## விநாயகர் வணக்கம்

[5]நிம்ப நிழற்களி(று)
அம்பொன் மலர்த்தாள்
நம்புதும் முத்திநல்
இன்பம் வரற்கே.

## சுப்பிரமணியர் வணக்கம்

[6]சமரபுரிக் குகன்
விமல மலர்த்தாள்
எமதுளம் வைக்குதும்
[7]மும்மலம் அறற்கே

---

1. பகை 2. போர் 3. முத்தி 4. பேரின்பம்
5. வேம்பு 6. போரூர் 7. ஆணவம், கன்மம், மாயை

## குரு பரம்பரை வணக்கம்

மறைமுடி அதனில் விளங்கிடும் ஒளியே
மனிதரைப் போலவந்து எனது
[1]சிறைதவிர்த்து ஆண்ட சிவப்பிரகாச
தேசிகன் தன்னைமற்ற றவன்றன்
[2]நறைமலர் அடியைப் போற்றிடும் சாந்த
நாயகன் தன்னைமற் றவன்றன்
நிறையருள் பெற்ற பழனிமா முனியை
நெஞ்சினுள் இருத்தியே பணிவாம்

## நூலாசிரியர் வணக்கம்

போந்தெம் உயிர்க்குயிர்
ஆந்துணை ஒத்த
சாந்தையர் தம்பதம்
ஏந்து கருத்தே

பஞ்சபூத காரியமாகிய உடம்பினையும் ஞானேந்திரிய கருமேந்திரியங்களையும் [3]நேதிகளைந்து, அதன்பின்னர் [4]அந்தக் கரணங்களையும் நேதிகளையத் தொடங்கும்போது அவைகளுக்குள் பிரதானமான மனத்தை எதிரிட்டு நோக்கி நீக்குந்தோறும் அம்மனம் அந்த விவேகத்திற்கு மிகவும் ஒற்றுமையாகலின் நீங்காது முன்னைப்பழக்கம்போல் விவேகத்தைத் தன்வயப்படுத்தித் தனக்குப் பற்றுகளாய் உள்ளவற்றில் இழுத்துச் செல்ல அஃது அங்ஙனம் இழுத்துச் செல்லுதலை விவேகம் அறிந்து தனது வலியினால் எதிரிட்டு நின்று, இஃது எவற்றைப் பற்றி நின்று எழாநின்றதென்று நோக்கி அதுபற்றிய பற்றுக்கள் யாவையும் இவை இவையென்று அறிந்து, அதற்கு அப்பற்றுகளையெல்லாம் விடுவித்து அதனைத் தன்வயமாக்குதற் பொருட்டு மனத்தை முன்னிலையாக்கி விவே

1. பிறவியாகிய சிறை 2. மணம் 3. இதுவன்று இதுவன்று எனக்களைந்து (ந-இது-தேதி; ந-எதிர் மறைப்பொருள்.)
4. உட்கருவிகள் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.



கம் கூறிற்றென்று, விவேகத்தின்மேல் வைத்து இந்நூல் கூறுகின்றார்.

1. வாழி நெஞ்சமே சென்றிடேல்
நின்றதோர் வார்த்தையெற் குரைசெய்வாய்
கீழி யாமியற் றுயர்தவத்(து)
இவ்வுடல் கிடைத்ததன் ரேமற்றீ(து)
ஊழி காலமிங் கிருக்குமோ
நீயுமோர்ந் துணையெனின் உளபோழ்தே
சூழும் ஏழ்பவம் துடைத்தல்செய்
யாயிதென் தொழுதரன் துணைத்தாளே.

வாழி நெஞ்சமே, எ-து. பகைவனால் காரியங் கொள்வோன் அவனைத் தனது வயமாக்குதற் பொருட்டு அவனுக்கு இனிமை கூறுதல் போல் நீ வாழக்கடவாய் நெஞ்சமே என்று விவேகம் கூற, அதற்கு எண்ணில் காலம் உடலும் உயிரும் போலும் சேறும் நீரும் போலும் உம்மோடும் பிரிவின்றி யிருந்த என்னை இப்போது பிரித்து நின்று நீர் தோத்திரம் பண்ணியது என்னையென்று மனம் கேட்ப, சென்றிடேல் நின்று இதோர் வார்த்தை எற்கு உரை செய்வாய் எ-து. அதற்கு, நீ ஒரு கணம் போதாயினும் நில்லாது [1]விடயங்களிற் செல்லா நின்றனை-அங்ஙனம் செல்லாது நின்று இஃதோர் சொல் எனக்குச் சொல்லுக என்று விவேகம் கூற, அதற்கு யான் சொல்லவேண்டிய சொல் என்னையுள? நீர் சொல்லுக; யான் கேட்கின்றேன் என்று மனம் கூற,—கீழ் யாம் இயற்று உயர்தவத்து இவ்வுடல் கிடைத்தது அன்றோ எ-து, அதற்கு, கீழ்ப்போன [2]அனந்த சனனங்களில் யாம் செய்திராநின்ற மேலான தபோபலத்தினாலன்றோ இந்த அரிதாகிய மானுட தேகம் கிடைத்ததென்று விவேகங் கூற, அதற்கு ஈது உண்மையாமென்று மனஞ் சம்மதிப்ப, அதற்கு அங்ஙனம் அரிதாகக் கிடைத்த தேகத்தைப்பெற்றும் சீக்கிரத்திலே திருவடியை அடைவதற்கு ஏது பண்ணாமல் வீணாள் கழிப்பது என்னையென்று விவேகங் கூற, அதற்கு இந்தத் தேகம் பெற்ற நாம் இனித்திருவடியை

1. பொருள் 2. பலபிறப்பு

அடையாது விடுகின்றேமோ நீர் சீக்கிரம் பண்ணியது என்னை? சில நாள்களின் பின்னர் அதனை அடைகுதும் என்று மனம் கூறமற்று ஈது ஊழிகாலம இங்கிருக்குமோ எ-து. அதற்கு, இத்தேகம் கற்பகாலம் இவ்விடத்து இருப்பதோ? இதற்கு அளவு கூறிய நூருண்டுகள் இடை இடையே கணந்தோறும் [1]அநித்தியமிருத்தலின் எந்தக்கணம் இருக்குமோ எந்தக்கணம் போமோ தெரியாதென்று விவேகம் கூற அதற்கு அங்ஙனம் அநித்தியமாம் எனின் இதனை ஒழித்து இனிவரும் [2]காயத்து அத்திருவடியை அடைகுதும் என்று மனம் கூற. அதற்கு, இனியோர் காயத்தின் கண் அதனை அடைகுதும் என்னில் பெறுதற்கரிய பிறவி யென்றும் சிலநாள்களின் பின்னர் அடைகுதும் என்னில் அறிதற்கரிய அவதி என்றும் விவேகம் கூற, அதற்கு, நீர் இங்ஙனம் கூறியது உண்மை என்று மனம் சம்மதிப்ப-நீயும் ஓர்ந்துளை எனின் எ-து அதற்கு, இந்தக் காயம் கிடைத்தற்கு அரிது என்பதையும் இதனது நிலையாமை யினையும் நீயும் விசாரித்து அறிந்தனை யாயின்,- உளபோழ்தே சூழும் ஏழ்பவம் துடைத்தல் செய்யாய் இதென் தொழுது அரன துணைத்தாளே. எ-து இக்காயம் இருக்கும் போதே சிவனது [3]உபய பாதங்களையும் தொழுது எம்மை வளைந்து கொள்ளா நின்ற [4]எழுவகைப் பிறவிகளையும் நீக்கிக் கொள்ளுதல் செய்யாய், இது என்னை நின்கருத்து இருந்ததென்று விவேகம் கூறிற்று. எ - று. மற்று என்பது அசைநிலை.

உயர்தவத் திவ்வுடல் கிடைத்ததென்பதற்கு உதாரணம்:
ஞானவாசிட்டம்-(நிருவாணப் பிரகரணம்-செய். 9)

எறியும் சடலின் நுகத்துளையில் ஆமைக்கழுத்துப் புகுவதுபோல்
பொறிவெர் பிறவி அநேகத்தால [6]புருடன் விவேகி எனப் பிறந்து
முறியும் பிறவிப் பயனிலத இம் மோகம் அமையும் செய் தொழிலால்
செறிவ தென்னே இவற்றாலே தினங்கள் எல்லாம் சென்றிடுமால்

1. அழிவு 2 உடம்பு 3 இரண்டு. 4. தேவர், மக்கள், விலங்கு பறவை ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் 5. ஊழ் 6. ஆன்மா.



ஊழி காலம் இங்கிருக்குமோ என்பதற்கு உதாரணம்:
திருவள்ளுவநாயனுர்:- (அதி - நிலையாமை - 9)

உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு

பெறுதற்கரிய பிறவிக்கும் அறிதற்கரிய அவதிக்கும் உதாரணம்
ஆனந்தத் திரட்டு :-

பெறுதற்கு அரிய பிறப்புஈது இதன்போக்கு
அறிதற்கு அரிய அவதி — பிறிதொன்றை
நாடுதற்கு நேரமுண்டோ நன்னெஞ்சே முத்திநெறி
கூடுதற்கல் லாது [1]குறித்து

மற்றும் வருவனவற்றால் காண்க. (1)

இங்ஙனம் நீர் கூறியது உண்மையாகலின் இனித்திருவடியை அடையக் கடவம் என்று மனம் சம்மதிப்ப மேற் கூறுகின்றது.

2. தானை யேதரம் அறிகிலா(து)
எமக்கெளி தருசிவப் பிரகாசத்திற்(கு)
ஆளி யாமெனத் திரிந்தவன்
பணிபுரிந் தரியவீ டடைகில்லாய்
கேளை யோமனை யாதிய
அளற்றிலே கிடந்துழைத் தனைநெஞ்சே
நாளை ஒலையும் தூதரும்
வரினிவர் துணைகொலோ நவில்வாயே.

தானையே தரம் அறிகிலாது. எ - து. சுரர் முதலாகத் தாவரம் ஈருகச் சொல்லப்படா நின்ற எழுவகைப் பிறவித்

1. நினைந்து.

துன்பங்களையும் துடைத்தல் செய்யும் அரிய திருவடிகளைக் கொடுத்தற்குப் [1]பக்குவன் என்றும் [2]அபக்குவன் என்றும் பாராது, - எமக்கு எளிதரு சிவப்பிரகாசற்கு எ - து. அருமைப் படுத்தாது எமக்கு எளிதிலே தந்த சிவப்பிரகாசன் என்னும் நாமதேயத்தையுடைய ஆசாரியருக்கு. - ஆள்யாம் எனத் திரிந்து அவன் பணிபுரிந்து அரிய வீடு அடைகில்லாய் எ - து. அவரது அடிமையாம் என்று யாவரும் கூற அவரது திருவுளத்திற்குப் பாங்காக நடந்துகொண்டு அவரது ஏவற் பணிவிடைகளைச் செய்து யாவருக்கும் அரிய வீட்டினை அடைந்தாயில்லை, - கேள் ஐயோ எ - து. ஐயோ நீ கேட்பாயாக,-மனையாதிய அளற்றிலே கிடந்து உழைத்தனை நெஞ்சே எ - து. பெண்டிர் முதலிய குடும்பச் சேற்றின்கண் வீழ்ந்து உழைத்துக் கொண்டனை நெஞ்சமே, நீ என்ன காரியம் செய்துகொண்டாய், - நாளை ஓலையும் தூதரும் வரின் இவர் துணை கொலோ நவில்வாயே எ - து. இனி நாளைக்கு இயமனது தூதரும் ஓலையும் வருங்காலத்து இந்தப் பெண்டிராதிய சீவர்கள் துணை யாவரோ என்று விவேகம் கூறிற்று எ - று.

மிகுந்த சேற்றில் விழுந்தோன் கிடந்து உழைத்தல் போல் மிகுந்த செல்வம் பெற்றோனுக்கும் அதில் மூழ்கி மயங்கி மறுமை குறிக்கக் கூடாமையின் கிடந்து உழைத்தனை என்று கூறப்பட்டது.

தானேயே தரம் அறிகிலாது என்பதற்கு உதாரணம் :-
ஞானவாசிட்டம் - (தாசூரன் கதை - செய். 12)

இயற்கைகுணம் சோதித்து முன்னே பின்னே
யாவையுமாம் பிரமம்நீ என்னல் வேண்டும்
வியப்புறஆ சையில்உழல்வார்க் கிவ்வா றேதின்
மீளாத தீநரகில் வீழ்த்த தாகும்
[3]தியக்குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி
தெளிந்தஉணர் போல்வார்க்கே திகழத்தோன் றும்
மயக்கமற உணர்த்தவல்ல குருவைக்கிட்டா
வருந்தியும்தன் பிறப்பறுக்கும் மகனும் ஆங்கே.

---

1. தகுதியுடையவன் 2. தகுதியற்றவன்
3. அறிவை மயக்குகின்ற போகம்.



பணிபுரிந்து அரிய வீடடை கில்லாய் என்பதற்கு உதாரணம்:-
வீராகமம் :—

அடுத்ததின் தன்மை ஆன்மா ஆகுமென் றறிந்து நல்லோர்
நடித்திடும் சமய வாத நற்றவம் செபம் தியானம்
[1] படிற்றுல கியற்கை யாவும் பரகதி விலக்காம் என்றே
விடுத்தருட் குரவன் பாதம் மேவிமெய்ப் பணிசெய் வாரே.

மனையாதிய அளற்றிலே கிடந்து உழைத்தனை என்பதற்கு உதாரணம் :—

ஞானவாசிட்டம் — (தாசூரன் கதை 44

தாரதனம் மிகுமென்னில் தளையாகும் அப்பாசம்
தளைத்துக் கொண்டால்
ஆரதனை அறுத்தகலும் [2] விரகுடையார் அறிவிலார்
ஆசை விஞ்சிக்
[3]கூரிதையாம் அப்போகத்து உழன்றுழக்கும்
கொடுந்துயரைக் குறித்த போதே
[4] தீரதையாம் அறிஞருக்கு [5]விரத்தியுள தாய்ச்சித்தம்
தெளியு மன்றே

மற்றும் வருவனவற்றுள் காண்க.

நீர் கூறியது உண்மை; திருவடியே துணை; மனைவியாதிய சீவர்கள் துணையலர். ஆனால் இவர்களை விடுத்தால் பரிதவிப்பர் என்பதும் இவரை வைத்துப் பாதுகாப்பதற்கு ஒருதுணை இன்றென்பதும் குறித்து இவரோடும் கூடி நின்றேனென்று மனம் கூற அதற்கு மேற்கூறுகின்றது. (2)

---

1. வஞ்சனை 2. உபாயம்
3. மேன்மேலும் வளர்கின்ற போகத்தில் முயன்று வருந்துகின்ற
4. ஞானவீரமும் அருளும் உடைய 5. உவர்ப்பு (வெறுப்பு.)

3. நவிலின் இம்மனை மக்களுக்(கு)
ஒருதுணை நாமல(து) இலையென்றே
கவலை யுற்(று)அரன் தாள்மறந்
தனையுனைக் காலனர் கொடுபோயிற்
குவல யத்தடைந்(து) இவரைநாள்
தொறும்புரந் திடுவையோ குறிக்குங்காற்
சவலை நெஞ்சமே சிவனலா(து)
உயிர்க்குயிர் தானுமோர் துணையாமே

நவிலின் இம்மனை மக்களுககு ஒரு துணை நாம் அலது இலை என்றே கவலையுற்று அரன் தாள் மறந்தனை எ - து. சொல்லுமிடத்துப் பெண்டிர் புத்திரர் முதலியோர்க்கு ஒப்பற்ற துணை நாமன்றி வேறு இன்றென்று சிவனது திருவடியை மறந்தனையாகலின் திருவடியே துணையென்றும்; மனைவியாதிய சீவர்கள் துணையலர் என்றும் நீ முன் கூறியவற்றிற்கு [1]ஏது வென்னை யென்று விவேகங் கேட்ப, அதற்கு, இந்த மனைவியாதிய சீவர்களை யாவர் காப்பரென விடுப்பேன் என்று மனம் கூற,—உனைக் காலனர் கொடுபோயின் குவலயத்து அடைந்து இவரை நாள்தோறும் புரந்திடுவையோ எ - து: உன்னை இயமன் கொண்டுபோமிடத்து மீண்டும் இப்பூமிக்கண் வந்து இச் சீவர்களை எக்காலத்தும் காப்பையோ அஃதன்றி ஒரு கணப்போதாயினும் வந்து இவரை நீர் நன்றிருக்கிறீரோ வென்று கேட்கத்தான் கூடுமோ என்று விவேகங் கூற, அதற்கு அவரை யான் இருக்குமளவாயினும் காக்குவலென்று மனங்கூற, அதற்கு நீயிருக்கும் போதாயினும் [2]திருபர்முதலாயினோர் உன்னைக் கொண்டுபோயினராயினும் அன்றி அவரைக் கொண்டுபோயினராயினும் அப்போது உன்னாற் காக்கப்பட்டார் யாவரென்று விவேகங் கூற, அதற்கு, நீர் கூறியது உண்மையென்று மனஞ் சம்மதிப்ப,—குறிக்குங்கால் சவலை நெஞ்சமே சிவன் அலாது உயிர்க்கு உயிர் தானும் ஓர் துணை

1. காரணம். 2. அரசர்



யாமே, எ - து: உண்மையாகப் பார்க்கும் இடத்துப் பேதைமையுடைய நெஞ்சமே சீவர்களுக்குச் சிவனே துணையன்றிச் சீவர்களுக்குச் சீவர்கள் துணையாவரோ வென்று விவேகங் கூறிற்று எ - து.

"இயற்பெயர் முன்னர் [1] ஆரைக்கிளவி
பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே"

(தொல் - சொல் சூ. 270)

—என்பதனுல் காலன் என்னும் இயற்பெயர் முன்னர் ஆர் என்பது வந்தது.

நவிலின் இம்மனை மக்களுக்கு ஒருதுணை யென்பதற்கு உதாரணம்: ஆனந்தத்திரட்டு:

"உடலை யொண்பொரு ளினையுல
கியல்பினை யுயர்குல நெறிதன்னை
அடையு மைந்தர்தாய் தந்தைநன்
மனையென அறைதரும் அவர்தம்மை
விடவி [2]கந்திறை கழலினை
மேவிய [3]விமலர்தங் கனையெல்லாம்
உடைய நன்குறு மொழிமறை
முனிவர்க ளுரைப்பர்[4]ஆத் தர்களென்றே

சிவனலாதுயிர்க்குயிர் என்பதற்கு உதாரணம்:
திருவருட்பயன் :— (பதிமுது நிலை — குறள் 1)

"அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
[5] நிகரிலிறை நிற்கு நிறைந்து".

மற்றும் வருவனவற்றுற் காண்க.

நீர் இங்ஙனம் கூறியது உண்மை. இனித்துணையாவது யாது? பகையாவது யாது? மனைவியாதிய சீவர்கள் வந்த

1. ஆர் என்னும் சொல் 2. நீங்கி 3. மலமற்றவர்
(சிவன் முத்தர்கள்) 4. பெரியோர் 5. ஒப்பற்ற.

வாறு எங்ஙனம்? நீர் கூறுகவென்று மனங்கேட்ப அதற்கு மேற்கூறுகின்றது.

4 துணைய தாயெமைத் தொடர்தரு
தொடர்பரன் றொல்கழல் துணையல்லா
துணைவு செய்தடு மிகலதஞ்
ஞானமென் றுள்ளவா றுணராய்மற்(று)
இணையின் நெஞ்சமே பகையிவர்
உறவுஇவர் எனவினை வழியேவந்(து)
அணைவ சீவரை யுனிமுனி(வு)
ஆதிய அடுத்தெனைக் கெடுத்தாயே.

துணையதாய் எமைத் தொடர்தரு தொடர்பரன் தொல் கழல் துணை, எ-து: சிருட்டி தொடங்கி, வீடடைவிக்கு மளவும் துணையாகி எம்மை விட்டு நீங்காதிருக்கின்ற உயிர்க்கு உறவாகிய சிவனது தொன்மைப் பாதங்களே துணையென்றும், —அல்லாது உள்நைவு செய்து அடும் இகலது அஞ்ஞானம் என்று உள்ளவாறு உணராய் எ-து. அஃதன்றி உள்ளத்தை மெலிவு செய்து நாசம் பண்ணுநின்ற பகையாவது அஞ்ஞானம் என்றும் உள்ளபடியே யறிந்தனையில்லை, — இணை இல் நெஞ்சமே எ—து. இழிவினாலுனக்கு வேறு ஒப்பு இன்றிய நெஞ்சமே, — பகை இவர் உறவு இவர் என வினை வழியே வந்து அணைவ சீவரை உனி, எ-து. இருவினையின் வழியராய் வந்து பொருந்திய சீவர்களை இவர் பகைவரெனவும் இவர் [1]உறவரெனவுங் கருதி,—முனிவு ஆதிய அடுத்து எனைக் கெடுத்தாயே எ-து. பகையென்று வெகுளியும் உறவென்று விழைவும் அடைந்துஉன்னோடு கூடிய என்னையுங்கெடுத்தாய் நீயென்று விவேகங் கூறிற்று-

ஆணவத்தால் மறைப்புண்டு கிடந்த வுயிரைச் சிவன் தனது காருண்ணியத்தினால் எடுத்து மாயைக் கண்ணே [2]தனு

---

1. சுற்றத்தார். 2. உடம்பு முதலியன



வாதிகளைக் கொடுத்து முன்னர் விடயஞானத்தை விளக்கிப் பின்னர்ச்[1]சுருதிகுரு சுவானுபவங்களினால்[2]சொருபஞானத்தை விளக்கி ஆனந்தானுபவத்தைக் கொடுத்தலின் உயிர்க்கு உறவு சிவன் என்றும், உயிரினது இரண்டு ஞானத்தையும் அநாதியே மறைத்து வீடடையுமளவும் துன்பத்தைச் செய்தலின் ஆணவம் உயிர்க்குப் பகையென்றும், நல்வினை அனுபவிக்கு மிடத்துப் பகைவரும் உறவர் ஆகலாலும், தீவினை அனுபவிக்குமிடத்து மனைவியாதிய உறவரே பகைவராய்த் தேகநாசம் செய்தலினாலும் இச்சீவர்கள் வினைவழியராய் வந்தவரன்றிப் பகைவரும் உறவரும் அலரென்று கூறப்பட்டது. மற்றென்பது அசைநிலை

பகை இவர் உறவு இவர் என்பதற்கு உதாரணம்:-
(சிவபோகசாரம்:— செய்-96)

"ஆர்பெரியர் ஆர்சிறியர் ஆர்உறவர் ஆர்பகைவர்
சீர்பெரியர் ஆனந்த[3]சிற்சொருபர்—பேர்பெரியர்
எங்கெங்கும் தாமாய் இருந்து [4]சட சித்தனைத்தும்
அங்கங்கு இயற்றுவத னால்."

மற்றும் வருவன வற்றாற் காண்க.

கெடுத்தாயே யென்றென்னை நீர் வெறுப்பது என்னை? பயன் இன்றிய உறவைப் பற்றுதலால் என்னையுள? கூறிய வாறே விடுத்தேனென்று உறவினை விடுத்துப் பொருளினைக் கருதிய மனத்தைப் பார்த்துமேற் கூறுகின்றது. (4)

5. கெடுவ(து) ஆம்பொருள் செல்வமே
பல்வகைக் கிலேசமற் றதுதன்னை
விடுவ தேசுகம் எனவுமோர்ந்
திலைமுனம் விடுத்துளோர்க்(கு) உனைப்போனும்
நெடிய யூகம(து) இல்லையோ
சொல்லுதி நெஞ்சமே இனிப்பற்றற்(று)

---

1. நூல் 2 தன்னைப்பற்றிய சிறப்பறிவு. 3. அறிவு வடிவமானவர் 4. சடம்-அறிவற்றது சித்து-அறிவுடையது.

அடைது மேலர னருளையே
பொருளென வருஞ்செல்வ மதுதானே,

கெடுவதாம் பொருள் செல்வமே பல்வகைக் கிலேசம் எ-து. அழிந்து போவதாகிய பொருட் செல்வமோ பலவேறு வகைப்பட்ட துன்பமென்று விவேகம் கூற, அதற்கு, முன்னர் மனைவியாதிய உறவுகளை நீர்விடுக்கச்சொன்னபடி விடுத்தேன் இப்போது இந்தப் பொருளையாயினும் [1]அருந்தலைக் குறித்து வைத்துக்கொண்டு தவத்தினைப் பண்ணுவல் என்றால் இதனையும் நாசம் என்றும் துன்பம் என்றும் கூறினீர். இனி இன்பமாவது யாது என்று மனம் கேட்ப,— அது தன்னை விடுவதே சுகம் எனவும் ஓர்ந்திலை எ-து. அதற்கு அந்தப்பொருளைக் கைவிடுவதே சுகம் எனவும் அதனைப் பிடித்தலே துன்பம் எனவும் உண்மையாக அறிந்தாயில்லை நீஎன்று விவேகம் கூற,அதற்கு நன்று கூறினீர்; இப்பொருளையும் விடுத்து [2]இரக்கச் சொல்லுகிறீரோ எள்று மனம்கேட்ப,—முனம்விடுத்துளோர்க்கு உனைப்போலும் நெடிய யூகமது இல்லையோ சொல்லுதி எ - து. அதற்கு, முன்னர்ப்பற்றுக்களாயுள்ளன யாவும் துன்பம் என்று அறிந்து துறந்தோர்க்கு உன்னைப்போலும் கூர்ந்த புத்தியின்றே நீ சொல்வாய் என்று விவேகம் கூற, அதற்குச் சம்மதித்து இங்ஙனம் சொல்லப்பட்ட பொருளுக்கு மேலாய பொருள் யாதென்று மனம் கேட்ப, — நெஞ்சமே இனிப் பற்றற்று அடைதும் மேல் அரன் அருளையே பொருள் என அருஞ் செல்வம் அது தானே எ - து நெஞ்சமே இனி இப்பொருள் மேல் வைத்த பற்றின் நீங்கி மேலாய சிவனது அருளையே பொருள் என அடைவோம்; அதனை அடைந்தால் அவ்வருள் தானே அரியசெல்வமும் எமக்கு என்று விவேகம் கூறிற்றுஎ.று.

இப்பொருளால் இவ்வின்பம் வருதல்போல அவ்வருளால் அவ்வின்பம் வருதலின் அருஞ்செல்வம் அதுதானே என்று கூறப்பட்டது.

---

1. நுகர்தல், 2. பிச்சையெடுக்க



செல்வமே பல்வகைக் கிலேசம் என்பதற்கு உதாரணம் :
நீதி வெண்பா

இன்னல் தரும்பொருளை [1]ஈட்டுதலும் துன்பமே
பின்னதனைப் [2]பேணுதலும் துன்பமே — யன்ன(து)
அழித்தலும் துன்பமே அந்தோ ! பிறர்பால்
இழத்தலும் துன்பமே ஆம்

விடுவதே சுகம் என்பதற்கு உதாரணம்:-
திருவள்ளுவ நாயனார்: — [துறவு — 1)

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

அருஞ் செல்வம் அதுதானே என்பதற்கு உதாரணம்:- திருக்கடைக் காப்பு:— (திருஞான சம்பந்த சுவாமிகள் - கோயில்-5)

செல்வ நெடுமாடம் சென்று[3]சேண் ஓங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே.

மற்றும் வருவன வற்றால் காண்க. (5)

இங்ஙனம் கூறிய ஏதுவினால், பொருள் துன்பம் என்று விடுத்துக் கண்ட சுகத்தை விழைகின்ற மனத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது.

6. தானை சூழமண் ணுலகையாண் டழிபவர்
தங்கள் வாழ் வினிதென்றே
நீங் ணைத்தியோ நெஞ்சமே எஞ்சுரு
நிமலஞா னமதுற்றால்

---

1. சேர்த்தல் 2. காப்பாற்றுதல். 3. உயர்ந்து

வானும் வையமும் வந்துதாள் வணங்குமெய்
வாழ்வுகாண் டலும்வீண்முற்
போன நாட்கிரங் கவும்வரும் எனநலோர்
புகன்றதோர்ந் திலைகாணே.

தானை சூழ மண்ணுலகை ஆண்டு அழிபவர் தங்கள் வாழ்வு இனிது என்றே நீ நினைத்தியோ நெஞ்சமே எ - து இரத, கச, துரக, பதாதிகளாகிய நால்வகைச் சேனையும் தம்மைச் சூழ்ந்துவர இப்பூவுல கரசாண்டு அவ்வாழ்வோடும் அழிந்து போகாநின்ற அரசர்களுடைய பொய்வாழ்வினை இனிது ஈதென்று நீ கருதினை கொல்லோ நெஞ்சமே என்று விவேகம் கேட்ப, அதற்கு, நீர் மேற் கூறியவாறே உறவையும் பொருளையும் விடுத்தேன்; இப்போது இவ்வரசரது செல்வத்தையும் இவரை யாவரும் வணங்கும் இவரது பெருமையினையும் கண்டு அதிசயித்த மாத்திரமே யன்றி வேறில்லை; அதற்கு நீர் இச்செல்வமும் பெருமையும் பொய்யென்றும் இவற்றை நீ விரும்பாதே என்றும் கூறினீர்; ஆனால் இச்செல்வ, பெருமைகளுக்கு மேலாய் மெய்மையாகிய செல்வமும் பெருமையும் எவை என்று மனம் கேட்ப,—எஞ்சுரு நிமல ஞான மதுஉற்றால் வானும் வையமும் வந்து தாள் வணங்கும் எ - து அணுவளவாயினும் குறைவுபடாத பரிபூரணமாய் நின்மலமாயுள்ள சிவஞானச் செல்வத்தை ஒருவன் அடைந்தால் அவனது பாதத்தை வானத்தோரும் வையகத்தோரும் வந்து வணங்கா நிற்பர்கள் ஆதலின் மெய்ச்செல்வமும் பெருமையும் இவையென்று அறிதி: — மெய்வாழ்வு காண்டலும் வீண் முன் போன நாட்கு இரங்கவும் வரும் என நலோர் புகன்றது ஓர்ந்திலைகாணே எ - து இஃதன்றி இந்த மெய்வாழ்வு கண்டவுடனே முன்னர்ப் பொய்வாழ்வில் வீணாய்க் கழிந்த காலங்களை நினைத்து இந்நெடுங்காலம் இவ்வின்பத்தை விட்டு இருந்தோம் என்று இரங்குதலும் வரும் என்று ஆப்தர் உரைத்த வாக்கியங்களை அறிந்திலை போலும்; நீ அவரது வாக்கியங்களைப் பார்த்து அறிவாயாக என்று விவேகம் கூறிற்று எ - று.



தானை சூழ மண்ணுலகை ஆண்டழிபவர் என்பதற்கு உதாரணம்,- நாலடியார்:- (செல்வம் நிலையாமை-8)

யானை [1] எருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும் — ஏனை
வினை [2] யுலப்ப வேறுகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மற்றார் கொள.

வானும் வையமும் வந்துதாள் வணங்கும் என்பதற்கு உதாரணம்:— ஞானவாசிட்டம் (சனகராசன் கதை-6)

மெத்தென்ற சரித்திரத்தி னவர்தம்மை உலகெல்லாம்
விரும்புந் தன்மை
கொத்தொன்று வனமூங்கில் குழலிசையால் மகிழ்விலங்கின்
கூட்டம் போலும்
இத்தன்மை யாவருக்கும் பொதுமையினால் இயப்பியதாம்
இதனின் வேறாய்ச்
சத்தென்ற வழியிரண்டேழ் பவந்தீர்ப்பவர்க் கவற்றைச்
சாற்றக் கேண்மோ

போன நாட்கு இரங்கவும் வரும் என்பதற்கு உதாரணம்:- பட்டணத்துப் பிள்ளையார் பாடல் (பொது-27)

அண்ணல்தன் வீதி அரசிருப் பாகும் அணிபடையோர்
நண்ணோரு நல்லொன்ப தாமவர் ஏவலும் நண்ணும் இவ்வூர்
துண்ணென் பசிக்கு மடைப்பள்ளி யான சுகமும் எல்லாம்
எண்ணிலி காலம் அவமே விடுத்தனம் எண்ணரிதே.

மற்றும் வருவனவற்றால் காண்க.

இங்ஙனம் கூறிய ஏதுவால் சுகப்பற்றை விடுத்து இடப்பற்றைக் கருதிய மனத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது. (6)

7. காணி யீதெம திடமிது வெனமணைக்
கருதிமண் ணுகின்றாய்

---

1. பிடர் (கழுத்து)  2. கெட,

நாணி லாய்மட நெஞ்சமே யுடலீது
நமதிட மலவென்றால்

பேண வும்படு மேயிதற் கிடமதாம்
பிருதிவி தனைநாகப்

பூணி னான்திருச் சரணமே யுயிர்க்கெலாம்
புகலிட மதுதேரே.

காணி ஈது எமது இடம் இது என மணைக் கருதிமண் ஆகின்றாய் நாண் இலாய் மட நெஞ்சமே எ-து இது எமது காணியெனவும் இது எமது வீடு எனவும் மண்ணை எனதென்று கருதி மண்ணாய் மடிந்து போகின்றாய்; இங்ஙனம் எண்ணில் காலம் யாதொன்றை யாதொன்றை நீ விழைந்து கருதினாய் அந்த அந்த மயமாய் நின்றே இறந்தனை; இங்ஙனம் இறந்தும் பிறந்தும் இத்துன்பங்களில் மொத்துண்டு இன்னும் பற்றா நின்றாய்; நீ வெட்கமில்லாய் போலும். பேதமை தானே நிறைந்த நெஞ்சமே! என்று விவேகம் கூற, அதற்கு, நீர் விடல் வேண்டும் என்றவற்றை யெல்லாம் விடுத்தேன்: இனி ஓரிடமாயினும் பிடித்துக்கொண்டிருந்து தவத்தைப் பண்ணுவேன் என்றால் நீர் இவ்விடமும் ஆகாது என்று கூறினீர்; இவ்விடம் வேண்டும் எனப்பிடித்ததனால் குற்றம் என்னை? என்று மனம் கேட்ப, — உடல் இது நமது இடம் அல என்றால் பேணவும் படுமே இதற்கு இடமதாம் பிருதிவி தனை எ-து வாத பித்த சிலேத்துமங்களினாலாகிய வியாதிகளுக்கு இடமாயுள்ள உடம்பு சடமாகலின் யாம் அறிவாகலின் இவ்வுடம்பே நமக்கு இடம் அன்றென்றால் இதனுக்கு இடமாய் உள்ள மண்ணினை இடமென்று பிடிக்கவும் தகுமோ? நீ சொல்லுதி என்று விவேகம் கூற, அதற்கு, நீர் கூறியது உண்மையாம்; அறிவுருமாய எமக்கு இடமாவது யாது? என்று மனம் கேட்ப, — நாகப் பூணினான் திருச் சரணமே உயிர்க்கெலாம் புகலிடம் அது தேரே. எ-து. சர்ப்பாபரணனாகிய சிவனது திருவடிகளே உயிர்



களுக்கெல்லாம் அடையும் இடமாகலின் அதுவே நமது இடமாம் என்று நீ அறிதி என்று விவேகம் கூறிற்று எ - று.

இதற்கு உதாரணம் சிவதருமோத்தரம் :—

மண்ணினும் தனத்தினும் மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினும் மகவினும் பெரிய பேரினும்
[1] துண்ணென விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினும் இன்புடன் விளங்கி மேவுவார்.

திருவள்ளுவ நாயனார் :— (நிலையாமை - 10)

[2] புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
[3] துச்சில் இருந்த உயிர்க்கு.

மற்றும் வருவனவற்றால் காண்க. (7)

இங்ஙனம் கூறியவற்றால் இடப்பற்றை விடுத்துப் புகழை விரும்பிய மனத்தினைப் பார்த்து மேற்கூறுகின்றது.

8 தேர்கி லாயிவண் புகழ்விழைந் தனையினித்
தேகம்வே றடைந்தாயேல்
சாரு மோவதில் இதிற்புகழ் அலதுநீ
தானுணர்ந் திடுவாயோ
பேரி யாதியாம் ஆர்கொல்முற் பவத்திகழ்
பெறினுமித் துணைநெஞ்சே
ஓரின் நேரில்வீ டுறுதலே புகழ்இகழ்
உறல்பிறப் பெனஉன்னே

தேர்கிலாய் இவண் புகழ்விழைந்தனை இனித் தேகம் வேறு அடைந்தாயேல் சாருமோ அதில் இதில்புகழ் அலது நீ தான் உணர்ந்திடுவாயோ, எ - து. புகழினது உண்மையை நீ நன்றாக விசாரித்து அறிந்தாயில்லை; இவ்விடத்துப் புகழை விரும்பாநின்றனை; இக்காயத்தை விட்டு இனிவேறோர் காயத்தை அடைந்தாயேல் இதன் கண் வந்த புகழ் அதன்

1. விரைவு-குறிப்புச்சொல் 2. புக்கு உறையும் வீடு 3. ஒதுக்கிடம்

கண் வந்து பொருந்துமோ? அஃதன்றி முற்பவத்து இன்ன புகழை யுடையான் இவன் என்று பிறரால் அறிந்து சொல்லத் தான் படுமோ? அஃதன்றி, நீ தான் முற்பவத்திலே நற்புக ழுடையேன் யான் என்று அறிதியோ? என்று விவேகம் கேட்ப, அதற்கு, இஃதாயினும் எனக்குத்தெரியாதோ? என்று மனம் கூற, — பேர் யாது யாம் ஆர்கொல் முற்பவத்து. எ - து. அதற்கு, இனிமேல் வரும் பிறப்பு விவகாரம் நினக் குத் தெரியுமாயின் முற்பிறப்பின்கண் எமக்குப் பேரியாது? யாம் யாவர்? எமது விவகாரம் என்னை? நீ சொல்லுதி என்று விவேகம் கேட்ப, அதற்கு, [1]மாறுத்தரம் கூறுதலன்றி மனம் சும்மா இருப்ப, — இகழ் பெறினும் இத்துணை நெஞ்சே எ - து. அதற்கு, உனக்கு வெறுப்பாகிய இகழ்ச்சி வருமாயினும் அது இந்தப் புகழ்ச்சி போலவேயாகும் நெஞ்சமே என்று விவேகம் கூற, அதற்கு, நீர் இங்ஙனம் கூறியவற்றுல் யாவரும் கூறு கின்ற புகழ் இகழ்வுகள் இல்லையென்பதாயிற்று. ஆகலின் இவைகள் இல்லையோ? என்று மனம் கேட்ப,-ஓரின் நேர் இல்வீடு உறுதலே புகழ் இகழ் உறல் பிறப்பு என உன்னே. எ - து. உண்மையாக விசாரிக்கு மிடத்து ஒப்பற்ற வீட்டினை அடைதலே புகழ் எனவும் பிறப்பினை அடைதலே இகழ் எனவும் நீ அறிதி என்று விவேகம் கூறிற்று எ - று.

வீட்டினை அடைந்தோரும் நித்தியம்; ஒன்றனையும் விரும்பாது அவ்வீட்டினையே விரும்பி அடைந்த அவரது புகழும் நித்தியம்; பிறப்பினை அடைந்தோரும் அநித்தியம்; இவரது புகழும் அநித்தியம் ஆதலின், அது புகழ் என்றும் இது இகழ் என்றும் கூறப்பட்டன.

இதற்கு உதாரணம்: ஒழிவிலொடுக்கம் (அதிகாரம் 1-செய் 56)

நாயேறி வீழ்ந்தென் நடாத்துகிலென் ஞானிக்குப்
[2] பேயாம் சகம்பழித்தென் பேணுகிலென் - தோயார்
பெருமை சிறுமையில்லை பின்னும் முன்னுமில்லை
[3] வரைவற்று வேண்டியசெய் வார்.

---

1. மறுமொழி (பதில்) 2. பேய்த் தன்மையாய உலகம்
3. (தம் செயலுக்கோர்) எல்லையின்றி.



உறவு முதல் புகழ் ஈருய ஐந்தற்கும் உதாரணம் :- பிரபுலிங்கலீலை (சாதகாங்க கதி, செய் - 19)

ஓடும் பொன்னும் உறவும் பகையுமோர்
கேடும் செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
வீடும் கானமும் வேறற நோக்குதல்
கூடும் தன்மை கொளும்மனம் நன்மனம்.

மற்றும் வருவனவற்றுல் காண்க. (8)

"தானேயே தரம் அறிகிலாது" என்னும் பாட்டு முதல் இவ்வேழு பாட்டாலும் மனத்திற்குப் புறப்பற்றுக்களாயுள்ள உறவு, பொருள், சுகம், இடம், புகழ் என்கிற இவ்வைந்தையும் விடுவித்து, இந்த உறவு முதலாகியஐந்தும் சிவனது திருவடியே என்று அறிவித்து, இனி உட்பற்றை நீக்கி அத்திருவடியை அடைதற்கு ஏதுவாய தவத்தைச் செய்யும்படி மனத்தைச் சம்மதிக்கப் பண்ண, அது சம்மதித்துத் தவம் செய்யத் தொடங்கும்போது, அத்தவத்தால் தன்னைப் பிறர் பெரியன் என்று கூற, அப்பெருமை கருதிய மனத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது.

9, உன்னு கின்றனே உனைமனோர் பெரியனென்
றுணருமா செயஉன்பால்
மன்னும் ஈசனே பந்தம்வீ(டு) அளிப்பவன்
மற்றையர் அறிந்தென்னும்
அன்ன வன்திருப் பொன்னடி கரியதா
அருந்தவம் செய்நெஞ்சே
பின்னை முன்னவன் உலகறிந் திறைஞ்சுமா
பெருமைசெய் குவன்ஒரே.

உன்னுகின்றனே உனை மனோர் பெரியனென்று உணருமா செய. எ - து, உன்னை இவ்வுலகத்திலுள்ளோர் தவத்தால்

பெரியன் என்று அறியுமாறு செய்ய நீ கருதுகின்றனை; -உன்பால் மன்னும் ஈசனே பந்தம் வீடு அளிப்பவன் மற்றையர் அறிந்து என்னும், எ - து. உன்னிடத்து விட்டு நீங்காது நிலைபெற்றிருக்கின்ற பரமசிவனே நீ செய்த அவத்தினையுந் தவத்தினையும் அறிந்து அவத்திற்குப் பயனாய பந்தமும் தவத்திற்குப் பயனாய வீடும் தருபவன். அச்சிவனையன்றி ஒழிந்த சீவர்கள் உன்னைப் பெரியன் என்று அறியும்படி அவர் சாக்ஷியாக நீ செய்யும் தவத்தால் உனக்கு என்ன பயன் உண்டாம் என்று விவேகம் கூற, அதற்கு, அச்சிவனது திருஉளத்துக்குப் பாங்காக நடக்கின்ற நன்னெறியாது? என்று மனம் கேட்ப,— அன்னவன் திருப் பொன் அடி கரியதா அருந்தவம் செய் நெஞ்சே எ - து. சீவசாக்ஷி குறியாமல் சிவனது திருவடி சாக்ஷியாக அரிய தவத்தினை நெஞ்சமே நீ செய்தி என்று விவேகம் கூற, அதற்கு, அத்திருவடி சாக்ஷியாகச் செய்யும் தவத்தால் வரும் பெருமை யாதென்று மனம் கேட்ப, பின்னை முன்னவன் உலகு அறிந்து இறைஞ்சுமா பெருமை செய்குவன் ஒரே, எ - து. அதற்கு, இங்ஙனம் நீ தவம் செய்த பின்னர் யாவர்க்கும் முதல்வனாகிய சிவன் இவ்வுலகத்தில் உள்ளார் யாவரும் நின்னைப் பெரியன் என்று அறிந்து வணங்கும்படி பெருமையைச் செய்வான்; இதனை நீ அறிதி; என்று விவேகம் கூறிற்று எ - று.

இதற்கு உதாரணம் :— சிவபோகசாரம் (செய் - 84)

நாம்பெரியர் என்னுமதை நாடா(து) அடக்குமவர்
தாம்பெரியர் என்றுமறை சாற்றியிடும் — நாம்பெரியர்
என்பார் சிறியர் இவரலா(து) இவ்வுலகில்
துன்பர் சுமப்பார்கள் சொல்,

மற்றும் வருவனவற்றால் காண்க. (9)

இங்ஙனம் திருவடி சாக்ஷியாகத் தவம்செய்கின்ற மனம் சுவர்க்க இன்பத்தைக் கருதியவாறுநோக்கி மேற்கூறுகின்றது.



(10) ஓரின் உள்ளமே பாரின்மா னுடர்முதல்
உளஅறு பிறப்பூடும்
சேரும் இன்பமொன் றில்லையென் பதுபிரத்
தியக்கமா நீவல்லாய்
போர்கள் ஆதிதுன் பிமையவர் அடைவதும்
புகலநூல் உணர்ந்தாயே
நேரி லாஅரன் கழல்அலால் மிகுசுக
நிலைபிறி திலையன்றே.

ஓரின் உள்ளமே பாரின் மானுடர் முதல் உள அறு பிறப்பூடும் சேரும் இன்பம் ஒன்று இல்லை என்பது பிரத்தியக்கமா நீவல்லாய். எ - து. நெஞ்சமே உண்மையாக விசாரிக்குமிடத்து இப்பூமிக்கண் மக்கள் முதல் தாவரம் ஈறாய் உள்ள [1]அறுவகைப் பிறப்பினுள்ளும் பொருந்தா நின்ற சுகம் ஓரணுவளவாயினும் இன்றென்பது காட்சிப் பிரமாணமாக நீயோ அறிய வல்லாய், — போர்கள் ஆதி துன்பு இமையவர் அடைவதும் புகல நூல் உணர்ந்தாயே, எ - து. அஃதன்றிச் சத்துருக்களோடு அமர் செய்தல் முதலியவற்றால் வரும் துன்பங்களைத் தேவர்கள் பொருந்துவதும் வேதாகம சாத்திரங்கள் கூற அதைச் சத்தப் பிரமாணத்தால் அறிந்தனை என்று விவேகம் கூற, அதற்கு, மக்கள் முதலிய அறுவகைப் பிறப்பிற்கும் மேலாய தேவப் பிறப்பின் கண்ணும் இன்பம் இன்றென்றீர்; இனித்தான் சுகமாவது யாது? என்று மனம் கேட்ப,---நேர் இலா அரன் கழல் அலால் மிகுசுகநிலை பிறிது இலை, எ - து. அதற்கு, ஒருவாற்றானும் உவமை கூறற்கரிய சிவனது திருவடியே யல்லது மிகுந்த பேரின்பநிலை வேறு இன்று என்று விவேகம் கூறிற்று. எ - று.

---

1 மக்கள், விலங்கு, ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன, தாவரம்
2. ஆகம அளவை.

பிறப்பும் இறப்பும் காமமும் நோயும் பயமும் முதலிய துன்பங்களைத் தேவர்கள் அடைதலின் போர்களாதி துன்பென்று கூறப்பட்டது. அன்றென்பது அசைநிலை.

இதற்கு உதாரணம் பெருந்திரட்டு :--

தீய அசுரர் பகையுண்டு [1]செற்றம் ஆர்வம் மிகவுண்டு
நோயுண்டு [2]அநங்க னுருண்டு நோய்கட் கெல்லாம் தாயான
காயம் உண்டு கைதொழ வேண்டுநரும் உண்டு [3]கற்பத்தே
மாயும் தன்மை உண்டானல் வானேர்க் கென்னை
வளனுண்டே.

ஆனந்தத் திரட்டு :

தேவின்மா னுடத்தில் துன்பம் திகழ்வதிப் [4]பரிசே என்ருல்
ஆவகீழ் விலங்கு [5]பக்தி ஆதிதா வரமற் றெல்லாம்
ஓவிலாத் துன்ப வெள்ளத் துழைத்தலோர் அளவும் உண்டோ
பாவமா [6]நிரயந் தன்னில் படுதுயர் பகரல் வேண்டா.

மற்றும் வருவனவற்ருல் காண்க. (10)

இங்ஙனம் கூறிய உபதேச மொழிகளை [7]அர்த்தாங்கீகாரமாக உட்கொண்டு பிரபஞ்சபத்தில் மிகவும் [8]உவர்ப்புப் பிறவாமல் நின்ற மனத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது.

(11) அன்றெ னக்குநீ யொருதுணை பிறப்பிறப்
பதில் துய ரமும்கேடும்
தின்றல் ஒன்றலால் வியாதியா திகளினுல்
செறிதுய ரமுமோர்ந்தோர்ந்து
என்றும் ஏழ்பவக் கஞ்சிலை நெஞ்சமே
இன்பவீ டெதுவென்றே
நின்று நின்றழு திலைதொழு திலைசிவன்
நேசர்தாள் பூசித்தே.

---

1. சினம் 2. மன்மதன் 3. ஊழி 4. தன்மை 5. பறவை
6. நரகம் 7. சொற்பொருள் ஏற்றல் கோடல் 8. வெறுப்பு



அன்று எனக்கு நீ ஒருதுணை. எ - து. பிறப்புத் துன்பமென்றும் வீடு இன்பம் என்றும் உனக்கு [1]நானு உபாயங்களினுலும் யான் அறிவித்தும் நீ அப்பிறப்பினை நீக்கி வீட்டினை அடைதற்கு ஏதுவாய தவத்தினை விரைந்து செய்யாது [2]தாமசம் பண்ணுகின்றனை யாதலின் எனக்கு நீ ஒப்பற்ற துணையன்று என்று விவேகம்கூற, அதற்கு, நீர் விடுக்கச் சொன்ன பற்றுக்கள் யாவும் விடுத்தேன். தவமும் செய்கின்றேன். நீர் இன்னும் கூறியவாறும் கேட்க நிற்கின்றேன், இங்ஙனம் இருந்த என்னை அங்ஙனம் கூறியது என்னை என்று மனம் கேட்ப,—பிறப்பு இறப்பதில் துயரமும் கேடும் தின்றல் ஒன்றலால் வியாதி ஆதிகளினுல் செறி துயரமும் ஓர்ந்து ஓர்ந்து என்றும் ஏழ்பவக்கு அஞ்சிலை நெஞ்சமே. எ - து. பிறப்பில் கருப்பாசயப்பை உறுத்தல் முதலிய ஐந்தினுல் வருகின்ற துன்பத்தையும் இறப்பில் அத்துன்பத்தின் எண் மடங்காகிய துன்பத்தோடு வருகின்ற நாசத்தையும் இவற்றிற்கு இடையாய் உள்ள[3] ஸ்திதிக்கண் அருந்தல் பொருந்தல்களாலும் நோய் முதலியவற்ருலும் அடையாநின்ற துன்பங்களையும் இடைவிடாது எக்காலமும் ஆராய்ந்து அவ்வெழுவகைப் பிறப்பிற்கு நெஞ்சமே நீ பயந்தாயில்லை,—இன்ப வீடு எது என்றே நின்று நின்று அழுதிலை தொழுதிலை சிவன் நேசர்தாள் பூசித்தே. எ - து. அஃதன்றி அப்பிறப்புத் துன்பங்களை நீக்குதல் செய்யும் சிவனது திருவடிக்கு நேயராகிய அடியாரது திருவடிகளை அருச்சித்து வணங்கினையில்லை; இன்ப வீடாவது யாதென்று அவர்களைக் கேட்டு நின்று அழுதாயில்லை; ஆகலின் யாம் கூறியவாறு நீ கேட்டது என்னை என்று விவேகம் கூறிற்று எ - று.

வியாதியாதிகளினுல் செறிதுயரம் என்றமையால் அருந்தல் பொருந்தற்கு ஏதுவாகிய திரவியம் தேடுதல், அதனைப் பாதுகாத்தல், நரை, [4]திரை, மூப்பு முதலியவற்ருல் வரும் துன்பமும் கொள்க. கருப்பாசயப்பையுறுத்தல் முதலிய ஐந்து

---

1. பலவழி 2. கால நீடிப்பு 3. நிலை (இருத்தல்)
4. தோல் திரைதல்.

துன்பம் என்றது: கருப்பாசயப்பை உறுத்தல், அதில் சலம் பூரித்தல், உதராக்கினியால் வேவுதல், பிர சூதவாயு முரித்துத் தள்ளுதல், யோனித் துவாரத்தில் நெருக்குண்டல் ஆகிய இவ் வைந்தும் என்றறிக.

இவற்றிற்கு உதாரணம் :—

சிவதருமோத்தரம் (செனன மரண இயல் 21)

என்றென் றெண்ணி இருக்குமுயிர் இடர்ப்பட்டழியும்
எழில்வரைக்கீழ்
ஒன்றும் ஒருவன் தனைப்போலக் கருப்பா சயப்பை
உறுத்துதலால்
மன்ற[3]உததி மறித்தாழ்வான் வருத்தம் என்ன வருந்தியிடும்
நின்ற கருப்பா சயஉதக வெள்ளம் கொள்ள நிறையழிந்தே.

அங்கி அதனில் தங்கியிடும் [2] அயோமயத்த கும்பத்தில்
தங்கும் ஒருவன் தபனம்போல் தபனம்எய்தும் தாய்உதரத்து
அங்கி சுடவே அழலனைய [3]சூசியதனுல் ஆகத்தைப்
பங்கித் திடவே படும்இடரின் [4]இருநால்குணிதம் பட்டழுங்கும்
[ஷை 22]

கருப்பா சயமே [5]கட்டமதாம் அதனில் அதிகம் கடுங்காலும்
முரிக்க மிகவும் மோகமுற முன்னை உணர்வும் அந்நிலையே
மரிக்க ஆலைக் கரும்பெனவே யோனி வழியின் வலிதொலைய
நெருக்கப் பட்டு நிலமிசையே தோன்றும் உயிர் ஊன்
நிலையுடனே [ஷை 23]

இப்பிறப்பின் எண்மடங்காய் வரும் நாசத்திற்கு உதாரணம்:-

பெருந்திரட்டு :—

பரணம் ஆகிய பெண்டிரும் சுற்றமும் பண்டுதம் கையில்தந்த
இரணம் ஆனவை கொண்டிட இவரைவிட் டியம்பிடா
திவனேகும்

1. கடல் 2. இரும்புக் கலசம் 3 ஊசி 4. எண் மடங்கு
5. கஷ்டம் (துன்பம்)



மரண வேதனை யாவரால் அறியலாம் மயங்கி ஐம்புலன் அந்தக்
கரணம் யாவையும் கலங்கிட வருந்துயர் கடவுளே அறிகிற்
[பான்

வந்திடும் மரணத் துன்பம் மறித்துரை செய்யப் போமோ
உந்திமேல் ஐயும் பித்தும் உணர்வொடு பொறி கலங்கி
நந்திடா இருளே மூடி நாவுலர்ந்து அலமந்து என்னே
இந்தமா இறப்பில் துன்பம் பவத்துன்பத் தெண்மடங்கே

ஆனந்தத் திரட்டு :

கருவிடை அழுந்தும் துன்பமும் நிலத்தின் கண்ணுறில்
[கொடிய வெந் நோயால்
மருவுவெந்துயரும் நரை திரைஎய்தி வருந்திடும் துன்பமும்
[கூற்ருல்
உருவினை ஒருவும் துன்பமும் மீட்டும் கருக்குழி ஒன்றுரு
[துயரும்
வெருவர எண்ணி இன்பவீட தனை மேவ நன்குணர்தலே
[வேண்டும்

நின்று நின்று அழுதிலை என்பதற்கு உதாரணம் :
திருவாசகம் - (திருச்சதகம்-31)

ஆடுகின்றிலை கூத்துஉடையான் கழற்கு அன்பிலை என்புருகிப்
பாடுகின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே

மற்றும் வருவன வற்ருல் காண்க (11)

நீர் கூறியவாறே பிறவித்துன்பத்திற்குப் பயமும் இதனை நீக்கி வீட்டு இன்பத்தினை அடைவித்தற்கு ஏதுவாகிய அடிய வரிடத்து அன்பும் எனக்கு இன்ருயது உண்மை. இனிப் பய பக்திகளோடும் கூடி வீட்டினை அடைதற்கு ஏது செய்கின்றே

னென்று மனம் கூற, அதற்கு, நீ என்னை அங்ஙனம் செய்கின்ருய் என்று பின்னும் அதனை வெறுத்து மேற் கூறுகின்றது.(12)

12. பூசை செய்துதோத் திரம்சொலித் தனைநினை
புண்ணியர் பால்நண்ணற்(கு)
ஆசை செய்திடும் அம்பலக் கூத்தனை
அடைகிலை அடைந்தாரில்
பேசு கின்றனை அறவரின் விளங்கினை
பிறர்மனை நயக்கின்ருய்
சீசி இங்கிருந் தென்செய்தாய் நெஞ்சமே
செத்திலாய் கெடுவாயே.

பூசை செய்து தோத்திரம் சொலித் தனை நினை புண்ணியர் பால் நண்ணற்கு ஆசை செய்திடும் அம்பலக் கூத்தனை அடைகிலை எ - து; தனது திருவடியைக் காயத்தால் அருச்சித்து வணங்கி வாக்கால் தோத்திரம் பண்ணி மனத்தால்தியானித்து இங்ஙனம் வழிபடும் பத்தி புண்ணியங்களுடைய அடியாரிடத்து எழுந்தருளுவதற்குத் திருவுளத்து இச்சை செய்யாநின்ற கனகசபைக்கண் நடம் புரிவோனை மனம் மொழி மெய்களால் வணங்கி அடைந்தாயில்லை, — அடைந்தாரில் பேசுகின்றனை அறவரின் விளங்கினை பிறர்மனை நயக்கின்ருய். எ - து. அவனது திருவடியை அடைந்த அடியார்போல் வார்த்தை மாத்திரம் சொல்லுகின்றனை; பசு புலித்தோல் போர்த்தது போல் உள்ளத்தில் வஞ்சம் வைத்துக் கொண்டு புறத்துத் துறவறத்தார்போல் அவரது வேடத்தால் விளங்காநின்றனை; எனக்கு உரிய மனைவியைத் துறந்து தவம் செய்கின்றேன் என்று தொடங்கிப் பிறர்க்குரிய மனைவியை இச்சிக்கின்ருய். —சீசி இங்கு இருந்து என்செய்தாய் நெஞ்சமே செத்திலாய் கெடுவாயே. எ - து. சீசி முன்னிருந்த இல்லறமும் அன்றி அதனை விட்டுப் பின்னர் அடைந்த துறவறமும் அன்றி இவற்றின் நடுவண் நின்று கூடா ஒழுக்கம் செய்கின்றனை



நெஞ்சமே நீ இவ்விடத்தில் இருந்து என்ன காரியம் செய்து கொண்டனை; இனி நீ இருந்தால் இக்கூடா ஒழுக்கத்தால் என்னைப் பவத்துன்பத்திலே தள்ளுவாயாகலின் நீ சாவாய் கெடுவாய் என்று விவேகம் கூறிற்று. எ - று.

தனை நினை புண்ணியர்பால் நண்ணற்கு ஆசை செய்திடும் என்பதற்கு உதாரணம்: திருவாசகம்:-

முத்தனே முதல்வா முக்கணு முனிவா மொட்டரு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப் பரகதி கொடுத்தருள் செய்யும்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில் செழுமலர்க் குருந்தம் மேவியசீர்
அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால் அதெந்துவே என்றருளாயே

பிறர்மனை நயக்கின்ருய் என்பதற்கு உதாரணம் : திருவள்ளுவநாயனுர் - (கூடா ஒழுக்கம். 3)

வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று. (12)

மற்றும் வருவனவற்ருல் காண்க

நீர் கூறிய முறையே செய்கின்றதன்றி என் மேலே தவறு ஒன்றும் கண்டிலேன். இங்ஙனமிருப்பச் செத்திலாய் கெடுவாய் என்று என்னை வெறுத்துக் கூறினீர். என்பால் தவறு தான் யாதென்று மனம் கேட்ப அதற்கு மேல் கூறுகின்றது.

13. வாயி னுற்பல நூல்படித் துணர்ந்துநல்
வழிபிறர்க் குரைசெய்தும்

நீயு லோகவா சாரமோர் அணுத்துணை
யானும்நீங் கிலைநெஞ்சே
தூய தாமிவண் பிறர்கொளக் குங்குமம்
சுமந்துசெல் கரம்உன்னில்
காய மானுடத் தின்றதற் கன்றியுட்
களவுமின் மையினாலே.

வாயினால் பலநூல் படித்து உணர்ந்தும் நல்வழி பிறர்க்கு உரை செய்தும் நீ உலோக ஆசாரம் ஓர் அணுத் துணையானும் நீங்கிலை நெஞ்சே எ-து. பல ஞான சாஸ்திரங்களை வாயினால் படித்தும் அவற்றினது பொருள்களை ஆராய்ந்தறிந்தும் பிறர்க்கு நன்னெறியாவும் அவர் சம்மதிப்பச்சொல்லியும் நீ முன்னிருந்த உலோகாசார வழக்கத்தில் ஓரணுவளவாயினும் உள்ளே துறந்தனையில்லை; இங்ஙனம் பிறப்பிற் கேதுவாகிய உலோகாசாரம் துறத்தலின்மையால் வீட்டிற் கேதுவாகிய ஞானசாரம் பற்றியதின்றென்பது நன்றறிந்தேன் நெஞ்சமே, — தூயதாம் இவண் யிறர்கொளக் குங்குமம் சுமந்து செல் கரம் உன்னில் எ - து. குங்குமப் பொதி சுமந்து செல்கின்ற [1] கர்த்தபம் உன்னிலும் நின்மலமாம் என்று விவேகம் கூற, அதற்குப் பல நூல்களைக் கற்றறிருந்து பிறர்க்கு உரைக்கச் சிவபூசை தோத்திரம் பண்ண இவற்றால் யாவரும் மதிப்ப இருந்த என்னை மிருக சண்டாளமாகிய கர்த்தபத்திற்குங் கீழ்ப்படுத்திக்கூறினீர்; இஃதென்னை? என்று மனம் கேட்ப; — காயம் மானுடத்து இன்று அதற்கு அன்றி உட்களவும் இன்மையினாலே எ-து. அதற்கு நீ, மக்கள் யாக்கையைப் பெற்று நூற்பொருள் உணர்ந்தும் அந்நூற்பொருளால் வீட்டின்பமாய பயனைப்பெறாது அப்பயன் பெற்றான் போல் நெஞ்சில் வஞ்சம் வைத்துக்கொண்டு அந்நூற் பொருளைப் பிறர் பயன்கொளக் கூறுகின்றாய். கர்த்தபத்திற்கு மக்களிடத்தாக்கையுமின்று. அஃதன்றியும் யான் சுமந்த குங்குமம் பிறர் பயன் கொளக்கொடுத்தேன் என்று வஞ்சமும் உளத்தின்றாகலின் உன்னை அதனினும் கீழ்ப்படுத்திக் கூறியதால் தோஷம் என்னை என்று விவேகம் கூறிற்று எ - து.

1. கர்த்தபம் - கழுதை.



உலோகாசாரம் நீங்கிலை யென்றமையால் ஞானசாரம் பற்றியதின்றென்பது வருவிக்கப்பட்டது. குங்குமம் ஆகு பெயர்.

வாயினால் பலநூல் படித்து என்பதற்கு உதாரணம் : திருவள்ளுவ நாயனார் :- (பேதைமை-4)

ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தான் அடங்காப்
பேதையில் பேதையார் இல்,

பிறர் கொளக் குங்குமம் சுமந்து செல்கரம் என்பதற்கு உதாரணம் அறிவானந்த சித்தியார் :-

விரிந்தநல் வேத புராணங்கள் ஆகமம் மிக்ககலை
தெரிந்து படித்துப் பொருள்செப்பித் தாம்நிலை சேர்ந்து [நில்லாது
இருந்த சண்டாளரின் ஏற்றம் கழுதை எழிற்குங்குமம்
பரிந்து சுமந்தும்பின் வஞ்சம் பண்ணாத பயன்எழிலே

மற்றும் வருவனவற்றால் காண்க.

என் உள்ளத்தின்கண் வஞ்சம் இருந்தமையால் நீர் இகழ்ந்து கூறினீர். பற்றுக்கள் யாவையும் விடுத்த எனக்கு இது விடுதல் அரிதோ! இதனையும் விடுத்தேன், இனி ஒரு மார்க்கத்திலே நின்று தவத்தைப் பண்ணி வீட்டை அடைதற்கு அறுவகைச் சமயங்களுள் ஒரு மேலாய சமயம் எனக்கு நீர் கூறுக என்று மனம்கேட்ப, அதற்குமேற்கூறுகின்றது. (13)

(14) நாலு வேதமும் ஒருசம நிலைசொல
நவைசெயீ ரவத்தைப்பால்
கோலும் மூவிரு சமயமா கியபடு
குழியினா டிழிகின்றாய்

வேலையா யுனக்கு உடல்தரு விதியுற
வையுமதை விடுவிக்கும்
கால னூர்தொடர் பையுமினந் தொடருதி
போலும்நீ கடைநெஞ்சே.

நாலு வேதமும் ஒருசம நிலை சொல நவைசெய் ஈரவத்தைப்பால் கோலும் மூவிரு சமயமாகிய படுகுழியினூடு இழிகின்ருய், எ - து. இருக்கு முதலிய நான்கு வேதங்களும் [1] சகல [2] கேவலங்களுக்கு மத்திய மாகிய [3] சுத்தாவஸ்தையை வீடடைதற்கு ஏது வென்று சொல்லக் காம, வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களையும் உண்டாக்குதல் செய்கிற சகல, கேவலங்கள் என்கின்ற இரண்டு அவஸ்தைகளின் பகுதியாகச் சமயிகள் தங்கள் [4] சித்த விகற்பத்தால் [5] கோலிய அறுவகைச் சமயமாகிய பிறவிப் படுகுழியிலே நீ இறங்கா நின்ருய் என்று விவேகம் கூற, அதற்கு இவ்வறுவகைச் சமயங்களையும் படுகுழி யென்றீர்; இது என்னை! என்று மனம் கேட்ப, அதற்கு, இங்ஙனம் கேட்டமையால் சமயங்களின்மேலே பற்றுக்கள் நீ இன்னம் விடுத்திலையாகலின் - வேலையா உனக்கு உடல்தரு விதி உறவையும் அதை விடுவிக்கும் காலனூர் தொடர்பையும் இனம் தொடருதி போலும் நீ கடை நெஞ்சே, எ - து. இதுவே வேலையாக உனக்கு உடல் கொடுக்கின்ற பிரமனுகிய உற வினையும் அவனுல் கொடுக்கப்பட்ட உடலகளை விடுவித்தலே வேலையாக விடுவிக்கிற கூற்றனுகிய நட்பினையும் எவ்வகைப் பட்ட பற்றுக்களையும் விடுத்துப் பிறப்பிறப்பை நீக்குதற்கு ஏது வாய் வந்தும் இன்னும் தொடர்கின்றனை போலும் நீ; யாவைக்கும் கீழாய நெஞ்சமே! என்று விவேகம் கூறிற்று, எ - று.

---

1. உயிர் உடலோடு கூடி தொழிற்படும் நிலை
2. அறிவு செயல்கள் இன்றி ஆணவத்தால் மறைந்து நிற்கும் நிலை
3. மலம் நீங்கிய நிலை 4. கருத்து வேறுபாடு 5. நிறுவிய



வேதாகமங்கள் கூறிய நெறி செல்வோர்க்குப் பிறப்பிறப்பு நீங்குதலேயன்றி மற்றைச் சமய நூல்கள் கூறிய நெறி செல் வோர்க்கு அவை நீங்கா என்பது இதனுல் காண்க.

நாலு வேதமும் ஒரு சமநிலை சொல என்பதற்கு உதா ரணம்:- பட்டணத்துப் பிள்ளை நாயனுர் :—(கயிலாயம் 3).

சினந்தனை யற்றுப் பிரியமும் தானற்றுச் செய்கையற்று
நினைந்ததும் அற்று நினையா ததும்அற்று நின்மலமாய்
தனந்தனி யேயிருந்து ஆனந்த நித்திரை தங்குகின்ற
[1] அனந்தலில் என்றிருப் பேன்அத்த னேகயி லாயத்தனே.

சமயமாகிய படுகுழி என்பதற்கு உதாரணம் :-
தேவி காலோத்தரம் :—

[2] சமயா சாரசங் கற்ப விகற்பமும்
அமையா தாம்குல ஆசார மானதும்
[3] இமையா தாரும் விடாதஇல் வாழ்க்கையும்
[4] அமையார் தோளாய் விடுதல் ஆசாரமே.

மற்றும் வருவனவற்ருல் காண்க. (14)

இனி இந்த உயிரைக் கொண்டு போகின்ற காலனுக்குத் தப்பிச் செல்லும் நெறி எனக்கு நீர் கூறுக என்று மனம் கேட்ப, அதற்கு, மேற் கூறுகின்றது,

(15) நெஞ்ச மேயுடல் அந்தம்ஆ தியைவிடார்
நிற்கமற் றையர்க்கெல்லாம்
வெஞ்ச மற்குதிப் பரிதிவைக் கொருமிரு
கண்டுபுத் திரன்சான்ருல்
அஞ்சல் இவ்வுடற் கிறுதியிப் பொழுதென
அறியொணு மையின்நாளும்

---

1. உறக்கம் 2. சமய ஒழுக்கம் 3. தேவர்கள் 4. மூங்கிலை ஒத்த

தஞ்சம் என்றரன் சரண்விடேல் யாமும்அச்
சமன்வலி தடுப்பாமே.

நெஞ்சமே உடல் அந்தம் ஆதியை விடார்நிற்க மற்றை யர்க்கு எல்லாம் வெஞ்சமென் குதிப்பரிது, எ-து. நெஞ்சமே [1] தேகாந்தத்தில் யாவர்க்கும் முதல்வனுகிய சிவனது திரு வடியை மறவாத பெரியோர்கள் நிற்க மற்றைச் சரியை கிரியை களைச் செய்கின்ற சீவர்கட்தெல்லாம் கொடிதாகிய கூற்றைக் கடந்து போதல் அரிது என்று விவேகம்கூற, அதற்கு, அவ் வடியை மனம், மொழி, மெய்களினுல் வழிபடுவோர்க்கும் கூற்றைக் கடந்து போதல் அரிது என்று கூறினிர்; இதற்குப் பிரமாணம் உண்டோ? என்று மனம் கேட்ப,-இவைக்கு ஒரு மிருகண்டு புத்திரன் சான்ருல், எ - து. அதற்கு சிவனது திரு வடியைத் தேகாந்தத்தின் மறவாது பிடித்துக் கூற்றைக் கடப் பதற்கும்அத்திருவடியை மனம் ஆதியால் வழிபட்டும் அவனைக் கடத்தல் அரிது என்பதற்கும் ஒப்பற்ற மிருகண்டு மாமுனி புதல்வராகிய மார்க்கண்டேயரே சாட்சியென்று விவேகம்கூற, அது எங்ஙனம்? என்று மனம் கேட்ப, அதற்கு, அவர் மனம் ஆதிகளால் வழிபட்டும் கூற்றன் வந்து பிடித்தான். அங்ஙனம் அவன் பிடித்தபோது பயத்தால் மறவாது சிவனது திரு வடியை அவர் பிடித்தமையால் அந்தக் கூற்றனையும் கடந்தா ராதலின் அவரே சாட்சி என்பது அறிதி என்று விவேகம்கூற, அதற்கு, திருவடியை வழிபடுதலால் யான் கூற்றைக் கடக்க லாம் என்று இருந்தேன். நீர் கூறியவற்ருல் அவனை இவ்வழி பாட்டால் கடக்கக்கூடாது என்பது அறிந்து அச்சமுற்றேன். இனி அவனைக் கடத்தற்குஏதுவாகிய திருவடியைப்பிடித்தற்கு உபாயம் நீர் கூறுக என்று மனம் கேட்ப,-அஞ்சல் இவ்வுடற்கு இறுதி இப்பொழுது என அறியொணுமையின் நாளும் தஞ்சம் என்று அரன் சரண் விடேல்யாமும் அச்சமன் வலி தடுப்பாமே, எ - து. அதற்கு, நீ அஞ்சற்க, இத்தேகத்திற்கு அந்தம்

1. உடம் பழியும் காலம்



இந்தக் கணப்போது என்று நம்மால் அறியக்கூடாமையால் எந்நாளும் மற்றை நினைவெல்லாம் ஒழித்துச் சிவனது திருவடி தஞ்சம் என்று அதனையே விடாது பற்றுதி. இங்ஙனம் செய்தி எனின் அந்தக் கூற்றன் நம்மைப் பிடிக்கவரும் சாமர்த்தி யத்தை நாமும் தடுத்துக் கொள்வாம் என்று விவேகம் கூறிற்று. எ - று. தஞ்சம்-பற்றுக்கோடு,

இதற்கு உதாரணம் பெருந்திரட்டு :—

[1] வில்வி ளங்கிய விண்ணவர் மிகுத்தவாழ் நாளும்
[2] அல்ல ரும்பகல் என்னும் [3] ஈர் வாளினுல் அரிந்து
கொல்லும் வெங்கொடும் கூற்றையார் [4] குலைவுருர் குறுகின்
நல்வி ருந்தென உவந்தெதிர் கொள்ளுவன் ஞானி,

என்றும், திருவள்ளுவர் :— (கடவுள் வாழ்த்து-4)

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை யில.

என்றும், மற்றும் வருவனவற்ருல் காண்க. (15)

இப்போது பெற்ற இக்காயத்தின்கண் நின்று ஒருதலை யாகத் திருவடியை மறவாது பிடிக்க வேண்டும் என்று இன் னும் வற்புறுத்துதல் மேற்கூறுகின்றது.

(16) தடுத்து மேலும்இவ் உருவமா யினும்பெறல்
சற்றல மறைநாகத்(து)
இடத்தின் மாதவர் இருவர்கங் கெனஅடைந்(து)
இருத்தல்சான் றரிதாகிக்

1. ஒளி 2. இருள் 3. அறுக்கின்றவாள் 4. அஞ்சாதார்

கிடைத்த தேகமும் விவேகமும் இருக்கும்ஞான்
றேகிரீ சனெநெஞ்சே
அடுத்தி லாய்பல கவலைமாய்த் தோருணர்
வாகிநின் றகலாதே.

தடுத்து மேலும் இவ்வுருவ மாயினும் பெறல் சற்றல. எ-து. இத்தேகத்தை விட்டு இனிமேல் இம்மானுட தேக மாயினும் பெறல் எளிதன்று என்று விவேகம் கூற, அதற்கு, இம்மானுட தேகமாயினும் பெறல் அரிதென்று மிகவும் அருமைப் படுத்திக் கூறுகின்றீர்; இது கிடைப்பது அரிது என்பதற்கு ஒரு காட்சிப் பிரமாணம் உண்டோ? என்று மனம் கேட்ப,—மறை நாகத்திடத்தின் மாதவர் இருவர் கங்கு என அடைந்திருத்தல் சான்று எ-து. அதற்கு, சம்பரன், சம்பாதி என்னும் இரண்டு முனிவரும் [1] புக்தியை விரும்பி மேலாகிய தவத்தினைப் பண்ண அதனல் சிவன்வந்து தோன்றி உமக்கு என்னை வேண்டியது? என்று கேட்ப, அதற்கு, தாம் கருதிய அதனை மறைத்து முத்தி வேண்டும் என்று கேட்ப, அதற்கு, நீர் கருதியதொன்றும் நம்மைக் கேட்பது மற்றென்றுமோ என்று திருவுளத்தின் முனிவு செய்து சாபம் கொடுத்தருள அதனல் அவ்விருவோரும் [2] வேதகிரியின் கண்ணே கழுகெனக் கிருதயுகம் முதல் இந்தக் கலியுகமளவும் இத்தேகம் கிடையாது இன்றும் இருத்தலே சாட்சி என்று விவேகம் கூற, அதற்கு, விஞவேறு இன்றி மனம் சும்மா இருப்ப,—அரிதாகிக் கிடைத்த தேகமும் விவேகமும் இருக்கும் ஞான்றே கிரீசனை நெஞ்சே அடுத்திலாய் பல கவலை மாய்த்து ஓர் உணர்வு ஆகி நின்று அகலாதே எ-து. ஆகலின் மிகவும் அரிதாகக் கிடைத்த இந்த மானுட தேகமும் இதனில் தன்னைத் தலைவனை அறிய வருகிற அரிதாகிய விவேகமும் இருக்கிற இக்காலத்தில் தானே தேக போகங்களைக் கருதுகின்ற பலவேறு வகைப்பட்ட கவலைகளையும் கெடுத்து ஏக அறிவாய் நின்று கயிலையங்கிரி வாசனுகிய சிவனது திருவடியைவிட்டு நீங்காது நீ அடைந்தா

1. போகம் 2. திருக்கழுக் குன்றம்



யில்லை. நெஞ்சமே நின் கருத்து இருந்தது என்னை யென்று விவேகம் கூறிற்று எ-று.

அரிதாகி என்பது விவேகத்தோடும் பிரித்துக் கூட்டப்பட்டது. தடுத்து மேலும் இவ்வுருவமாயினும் என்பதற்கு உதாரணம்:— ஆனந்தத்திரட்டு :—

மந்திரவாள் பெற்றும் பகைவெல்லான் மற்(று)
அதுகொண்(டு)
அந்தோதன் மெய்யை அரிந்தான் போன்று() - இந்த
கொண்டுமுத்தி செல்லும் குறிப்பின்றிச் சிற்றின்பம் [உடல்
கண்டுவினைக்(கு) ஆளாம் கணக்கு.

விவேகமும் இருக்கும் ஞான்றே என்பதற்கு உதாரணம் : ஞானவாசிட்டம்—(தாசூரன் கதை 30)

கையினல் அறையுண்ணும் பந்துபோலக் காலனல்
அறையுண்டு கணக்கிலாத
மெய்யிலே புகுந்து அலுத்து விவேகம் பெற்றும்
[1] விரகிலார் சிலர் பிறப்பில் மீண்டும் வீழ்ந்தார்
மையினல் மூன்றுலகாம் [2] பணதி செய்துவரும் நிற்கும்
போமாகி வளர்ந்து வாளா
பொய்யினல் மிகவிரியும் [3] வேலையூடே பொருதிரை
போல் பரபதத்தே புரிந்த மாயை.

மற்றும் வருவனவற்ருல் காண்க. (16)

இங்ஙனம் சத்தப் பிரமாணத்தாலும் காட்சிப் பிரமாணத்தாலும் இக்காயம் கிடைத்தற்கு அரிதென்று அறிவிக்க அறிந்து மனம் சம்மதிப்ப, இனித் திருவடியைத் தாமதம் பண்ணுமல் விரைந்து நினைத்தற்கு மேற் கூறுகின்றது.

1. பிறப்பறுத்தற்கு உரிய முயற்சி (உபாயம்) இல்லாதார்
2. ஓவியம் 3. கடல்

(17) அகலும் இவ்வுடல் மினின்விரைந் தெனின்விரைந்
தரற்ரெழு தலதிங்கே
சகல முஞ்செய நினைகுதல் தனையினித்
தடப்புன லிதுவென்றே
பகலி னுல்விரி கானலை நெஞ்சமே
கருதிநெற் பயிராதி
இகலி னுற்செய நினைபவர் நினைவையொத்
திடுமென விடுவாயே.

அகலும் இவ்வுடல் மினின் விரைந்து எனின் விரைந்து அரன் தொழு எ-து. மேகத்தின் கண்தோன்றி நின்றழியும் மின்னல்போல மாயையின் கண்தோன்றிக் கணகாலத் தழியும் இந்த உடல மென்ருல் இஃது உள்ளபோதே அதிசீக்கிரமாகச் சிவனது திருவடியை வணங்குதி - ஈதலது இங்கே சகலமும் செய நினைகுதல் தனை எ-து. இத்திருவடியை இடைவிடாது வணங்குதலன்றிப் பொய்யாகிய பிரபஞ்சத்தை மெய்யாகக் கருதிக்கொண்டு இப்பிரபஞ்சத்துள்ள [1] அறுவகைத் தொழிலை யும் செய்யத் தொடங்குவதை, - இனித் தடப்புனல் இது வென்றே பகலினுல் விரிகானலை நெஞ்சமே கருதி நெற்பயிர் ஆதி இகலினுல் செய நினைபவர் நினைவை ஒத்திடும் என விடு வாயே எ-து. சூரிய கிரணத்தால் பொய்யாய் விரிகின்ற கானல் சலத்தை மெய்யான தடாகசலம் ஈதென்று கருதி நெற் பயிர் முதலிய பைங்கூழினைத் தமது சாமர்த்தியத்தால் உண் டாக்குதல் செய்ய அறியாமையால் கருதுவாரது கருத்தைப் போலும் என் கருத்தும் என அறிந்து நெஞ்சமே இனி விடுப் பாயாக என்று விவேகம் கூறிற்று எ-று.

சூரிய கிரணத்தால் பொய்யாய்த் தோன்றும் கானற் சலம்போலச் சிவத்தைவிட்டு நீங்காத [2] அபின்னு சத்தியால்

1. உழவு-தொழில் வரைவு வாணிபம் வித்தை சிற்பம்
2. வேறுபடாதது



பின்னுசத்தி பொய்யாய்த் தோன்றுதலின் இப்பின்னு சக்தி காரியமாகிய பிரபஞ்சம் கானற் சலத்தின் நிழல் போலப் பொய் யெனக் கூறப்பட்டது. கானற் சலத்தைப் பொய்யென்று அறிந்தவன் பைங்கூழ் செய்ய நினையாமை போலப் பிரபஞ்சத் தைப் பொய்யென்று அறிந்தவன் இப்பிரபஞ்சத் தொழில்களின் முயலான் என்பது அறிக.

அகலும் இவ்வுடல் என்பதற்கு உதாரணம் :— குறுந்திரட்டு.

காயம் நீர்க்குமிழி அதிலுறும் இன்பம் கானலிற்புனல்
அதுதனக்கு இங்கு
ஆய அத் துயரம் அளவிலை அதுநீ ஆய்வுருமையில்
அழிந்து அற்ருய்
நீஇனிக் கவலை நினைவெலாம் ஒழித்து நெஞ்சமே வந்து
எனக்கு உடன்பட்டு
ஆயநற் சொரூபற்கு அன்பதே இசைந்தால் அரியதேது
ஆர் நமக்கு எதிரே

பிரபஞ்சம் பொய்யென்பதற்கு உதாரணம் :— திருவாசகம்.

பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே எனக்கருதிப்
[1] பேய்த்தேர் முகக்குறும் பேதைகுணம் ஆகாமே
தீர்த்தாய் திகழ்தில்லை அம்பலத்தே திருநடஞ்செய்
கூத்தாவுன் சேவடிகூ டும்வண்ணம் தோணுேக்கம்.

மற்றும் வருவனவற்ருல் காண்க. (17)

பிரபஞ்சம் பொய்யென்பதும் திருவடி மெய்யென்பதும் இங்ஙனம் நீர் அறிவிக்க ஐயமின்றி நன்றுஉணர்ந்தேன்; உமது கிருபையை என்னென்று உரைப்பேன்! என்று மனம் கூற அதற்கு, ஞானசமாதி கூடுதற்கு மனத்தை உடன்படுத்தி மேற் கூறுகின்றது.

1. கானல் நீர்

(18) வாய்மை ஈதுணர்ந் திடுதிநன் னெஞ்சமே
வருகணத் தேதேனும்
நீநி னைந்திடேல் அவ்வள வுடலுறல்
நிச்சயப் பரிதத்தால்
போய தோர்கணச் செயலுனேல் பயனிலை
புகல்நிகழ் கணத்தேனும்
தீமை நன்மைநீ நினைவதென் வினைவழிச்
சிவன்தரு குதலாலே.

வாய்மை ஈது உணர்ந்திடுதி நல்நெஞ்சமே எ-து. யான் கூறிய நன்மார்க்க நெறியே சென்று எனக்கு நன்மை தருகின்ற நல்ல நெஞ்சமே உண்மையாகிய இதனையும் நீ அறிவாய்,- வருகணத்து ஏதேனும் நீ நினைந்திடேல் அவ்வளவு உடல் உறல் நிச்சயிப்பரிது அத்தால் எ-து. நீ ஞான நிட்டை கூடு மிடத்து ஒரு கணப்போதாயினும் அந்நிட்டையில் நீங்காது இருக்க வேண்டுமாகலின் வருங்காலங்களில் கணப்போதாயினும் யாதொன்றனையும் கருதிச் செல்லற்க, அக்கணப் போதளவும் இவ்வுடல் இருத்தற்கு நிச்சயம் பண்ணக்கூடாது. அதனால்,-போயதோர் கணச்செயல் உனேல் பயன் இலை. எ-து. சென்ற காலத்து ஒரு கணப் போதாயினும் இன்னது செய்யாது விடுத்தேன் என்று கருதற்க; அதனால் பயன் ஒன்றும் இல்லையென்று விவேகம்கூற, அதற்கு வருங்காலம், சென்ற காலங்களில் ஒன்றையும் நினையேல் என்று கூறினீர். இஃதுண்மை, நிகழ்காலத்து அன்னபானாதிகளைக் குறித்தாயி னும் நினைக்கலாகாதோ என்று மனம் கேட்ப,-புகல் நிகழ்கணத் தேனும் தீமை நன்மை நீ நினைவது என் வினைவழிச் சிவன் தருகுதலாலே, எ - து. அதற்கு, சொல்லப்பட்ட நிகழ்காலத் திற் கணப் போதாயினும் நீ சுகதுக்கங்களை நினைவது என்னை? நமது நல்வினை, தீவினைகளின்படியே சிவன் அறிந்து சுக, துக்கங்களை நமக்கு அருந்துவித்தலால் என்று விவேகம் கூறிற்று, எ-று.



இதற்கு உதாரணம் :— திருவள்ளுவ நாயனர் (நிலையாமை 7)

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியும் அல்ல பல என்றும்,

ஔவையார் :— (நல்வழி செய் 28)

உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினை ந் தெண்ணுவன - கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையும் சஞ்சலமே தான்.

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க. (18)

பிரிய விடயங்கள் வரவேண்டுமென்று கருதாது இருத் தற்கும் வந்தவிடயங்களின்மேல் ஆசை செல்லாது திருவடியை மறவாது இருத்தற்கும் மேல் உபாயம் கூறுகின்றது.

(19) தருவ தீமையின் நன்மையும் ஊழடுத்
தனதஉயர் கழைமேல்நின்(று)
உரைகள் ஆதிசெய் கூத்தரில் பிறனைச்(சு)
ஒருமகள் தவன்ஏவல்
புரிதல் தன்னின்ஐம் பொறிகளால் பற்றினும்
புகல்நிரா சையைநீயுற்(று)
இரவி னும்பக லினும்விடேல் நெஞ்சமே
இன்பவீ டெளிதாமே.

தருவ தீமையின் நன்மையும் ஊழ் அடுத்ததை, எ-து. உனக்கு வெறுப்பாகிய துன்பத்தை நீ விரும்பாதிருக்கவும் பழவினைதானே கொடுப்பதுபோல் உனக்கு விருப்பமாகிய சுகத்தையும் நீ விரும்பாதிருக்க அவ்வினைதானே கொடுக்கும்.

உனக்கு எக்காலத்து எவ்வினைப் பயன் அனுபவிக்கப் பொருந்தியது அதனை, ஆகலின் பழவினைப்படியே வருமென்று அறிந்து எதிர்காலத்து ஒன்றையும் கருதாது விடுத்து, - உயர்கழை மேல் நின்று உரைகள் ஆதிசெய் கூத்தரில் பிறனை நச்சு ஒரு மகள் தவன் ஏவல் புரிதல் தன்னின், எ-து. உயர்ந்தகம்பத்தின் கண் நின்று அந்நிலைக்குத் தவறுவாராது அதன் கண் கருத்தை வைத்துத் தியாகியைப் புகழ்தல் முதலிய நோக்கு வித்தைகளைப் பழக்கத்தால் காயத்தில் காட்டுதல் செய்யும் கூத்தர் போலவும், பரபுருஷனை நச்சிய ஒரு நாரி அவன்மேல் கருத்தை வைத்துத் தன் புருஷனுக்குப் பழக்கத்தால் இவனது ஏவல் தொழில்களைச் செய்தல் போலவும்.-ஐம்பொறிகளால் பற்றினும் புகல் நிராசையை நீ உற்று இரவினும் பகலினும் விடேல் நெஞ்சமே இன்பவீடு எளிதாமே, எ-து. ஐந்து இந்திரியங்களாலும் ஐந்து விஷயங்களைப் பிடித்தாலும் சொல்லாநின்ற அவ்விஷயங்களை இன்பம் என்று கருதி அவற்றின்கண் ஆசை உருது திருவடிக்கண் ஆசையை வைத்து இதனை இராக்காலத்திலும் பகற்காலத்திலும் விட்டு நீங்காதே, யாவர்க்கும் அரிதாகிய வீட்டின்பம் உனக்கு எளிதில் உண்டாமென்று விவேகம் கூறிற்று, எ-று. தவன் - புருடன்.

இதற்கு உதாரணம் பெருந்திரட்டு :—

இல்லின்பம் இகழ்ந்து பேரின்பம்வேண்டி எழிற்குரு அருள்
தன்னின்மேலாம்
நல்லுணர்வு அதனைப்பெற்று ஓர் ஏகாந்தம் நண்ணியே
சமாதியில் தொடங்கி
அல்பகல் [1] நோக்கன் அரவம் ஆட்டிடுவோன் அறைதரு
[2] பணிக்கன் [3] மீகாமன்
வல் [4] கரிப் பாகன்போல நோக்குவர்க்கு மணியின்மீட்டு
இச்சையும் எழுமோ

மற்றும் வருவன வற்ருல் காண்க, (19)

1. கழைக்கூத்தன் 2. சாறுகாச்சுவோன் 3. கப்பலோட்டி
4. யானைப்பாகன்



எக்காலமும் இடைவிடாது திருவடியை மறவாதிருத்தல் [1] பிரதானம்; ஈதன்றி நிராசையுடனும் இருக்கவேண்டுமென்று கூறினீர்; இது என்னை என்று மனங்கேட்ப, அதற்கு மேற் கூறுகின்றது.

(20) ஆமுனிச்சையே மேலுமேலும் பிறப்பளிக்கும்
வித்தென நெஞ்சே
நீமறித்திடா சைக்கடல் சுவறுமே
நினைவெனுந் திரைமாயும்
போமிறந்தெலா நினைவுமெப் பொழுதிலப்
பொழுதுபூ ரணமாய
சோம சேகரத் தெந்தைபொற் கழலையுந்
தொழலைய மிலைநாமே.

ஆம் உன் இச்சையே மேலும் மேலும் பிறப்பு அளிக்கும் வித்தென நெஞ்சே நீ மறித்திடு. எ - து. உனது அவாவே மேன் மேலும் பல பிறப்பினை உண்டாக்கும் ஒரு வித்தென்று நெஞ்சமே நீ கருதி அந்த அவா மனத்தின்கண் முளைக்குந்தோறும் விவேகத்தாலே பார்த்துத் தடுக்குதல் செய், - ஆசைக்கடல் சுவறுமே நினைவு எனும் திரை மாயும், எ - து. அங்ஙனம் செய்தியேற் கண்ட விடயங்களை இச்சிக்கும் ஆசையாகிய கடல் வற்றும். அக்கடல் வற்றவே புற விஷயங்களில் செல்லு நினைவாகிய திரை நாசமாம்,—போமிறந்து எலா நினைவும், எ - து. அந்நினைவெனுந்திரை நாசமாகவே முன்னர் இந்திரியங்களாற் கண்டு மனத்தின்கண் ஏறியிருந்த விஷயவாசனை நினைவெல்லாம் ஒருங்கே இறந்துபோகும்,—எப்பொழுதில் அப்பொழுது பூரணமாய சோமசேகரத்து எந்தை பொற்கழலையுந் தொழல் ஐயமிலை நாமே. எ - து. அந்நினைவெல்லாம் எப்பொழுது இறந்தது அப்பொழுதுதானே சந்திரசூடனுகிய எமது தந்தையினது பரிபூரணமாகிய திருவடியையுந் தொழுதற்கு ஐயமின்றென்று விவேகம் கூறிற்று எ - று.

1. முதன்மை

உடல்விட்டு உயிர் நீங்குங்கால் யாதோர் அவாத் தோன்றிற்று அவ்வவாவின் வழித்தாய்ச் சென்று உயிர் பிறத்தலின் அவா பிறப்பிற்கு வித்தெனப்பட்டது.

இதற்கு உதாரணம் :- திருவள்ளுவ நாயனர்,

அவாவென்ப எல்லா வுயிர்க்கும் எஞ்ஞான்றுந்
[1]தவாஅப் பிறப்பீனும் வித்து.

ஆசைக்கடல் சுவறுமே நினைவெனுந் திரைமாயும் என்பதற்கு உதாரணம்:- ஞானவாசிட்டம்.

இச்சையாம் விறகு மாண்டால்
எண்ணமாம் வன்னிமாயும்
நிச்சய மாகுந் தியேயத்
தியாகமா நெடுந்தேரேறி
மெச்சிய வுதாரக் கண்ணுல்
வேட்கையான் மிகவும்வாடுங்
[2]கொச்சை ஞாலத்தை நோக்கிக்
குறைவற விருப்பாய் திரா.

மற்றும் வருவனவற்ருல் காண்க.

(21) நாம ரற்கருச் சனைமுத வியகொடு
நலஞ் செய்தே மவையின்றித்
தீமை செய்துளே மெனவுமுன் னிலையொரு
சிறிதசை வடைந்தாலும்
யாமி யற்றப ராதமென் னினைவுமற்
றசைகிலை யெனினெஞ்சே
ஏம மிக்குறச் செய்யுநன் கிறைகழற்
கெனத்துணிந்திடு நீயே.

1. கெடாதுவரும் பிறப்பு 2. அல்பம்



நாம் அரற்கு அருச்சனை முதலிய கொடு நலஞ்செய்தேம் அவை இன்றித் தீமை செய்துளேம் எனவும் உன்னிலை ஒரு சிறிது அசைவு அடைந்தாலும் யாம் இயற்று அபராதம் எ-து. யாம் இன்றைக்குச் சிவனது திருவடிக்குத் திருமஞ்சன பத்திர புஷ்பங்களால் செய்யும் அருச்சனை முதலிய உபசாரங்களைக் கொண்டு நன்மை செய்தோம் எனவும் இன்றைக்கு அவை செய்குதல் இன்மையாற்றீமை செய்தோ மெனவும் இங்ஙனங் கருதுதலைப்பற்றி உனது நிலை சிறிது ஓரசைவு பொருந்திற்ரு யினும் அத்திருவடிக்குச் செய்யும் அபராதம் அதுவேயாம் என்று விவேகங்கூற, என், எ-து. அதற்கு, பூசைசெய்தேன் செய்கின்றிலேன் என்னும் நினைவு சிவனுக்கு அபராதஞ் செய்தல் என்னை என்று மனங்கேட்ப அதற்கு ஈதென்று சுட்டியறியக் கூடாத சிவத்தைச் சுட்டியறிதலே அபராதஞ் செய்தல் என்று விவேகங்கூற அதற்கு அங்ஙனஞ் சுட்டாமற் சிவத்தையறிதற்கு உபாயம் எங்ஙனம் என்று மனங் கேட்ப,—நினைவும் அற்று அசைகிலையெனின் நெஞ்சே ஏமம் மிக்குறச் செய்யும் நன்கிறை சுழற்கு எனத்துணிந்திடு நீயே எ-து, அதற்கு ஓரணுவளவாயினும் ஒன்றைச் சுட்டி யெழுந்து அசையாது நிற்றியெனின் இதுவே திருவடிக்கு இன்ப மிருந் துறச் செய்யும் பூசையென நீ நெஞ்சமே நிச்சயித்து அறிதி யென்று விவேகம் கூறிற்று. எ - று.

தானும் உருவமாயிருந்து கொண்டு சிவனையும் ஒருருவாகக் கண்டு அருச்சனை பண்ணுதல் கற்பனையாகலின் இது அபராத மென்றும், தான் அறிவாய் நின்று அறிவிற்கறிவாகிய சிவத்தின் கண் அசைவற நிற்றல் உண்மையாகலின் இதுவே பூசை யென்றுங் கூறப்பட்டன.

இதற்கு உதாரணம் ;- ஆனந்தத்திரட்டு.

"எப்பொருள்களுந்தானுகி இலங்கிடு மறிவா மீசன்
அப்படி விளங்குகின்ற தறிதலேயவன்றனக்கு

மெய்ப்படு பூசைவேறோர் செயலினுலன்று மெய்யே
இப்படி ஞானந்தன் னிலிறைஞ்சிடப் படுவான் ஈசன்''

மற்றும் வருவனவற்ருற் காண்க.

இங்ஙனம் அசைவற நிற்றல் எனக்குக் கூடாது சிவன் இங்ஙனம் இருப்பானென்று தியானஞ் செய்கின்றேன் என்று கூறிய மனத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது.

(22) நீமெஞ் ஞானநன் னிட்டைசா ருதலரிது
எனவு நெஞ் சகமேசற்
றோய்விலாது செய்தியான மாதிகளெளி தெனவு
முன்னு நின்ருய்
சேய்க டம்மினத் தாய்கொல்சும் மாவிருக்குதல்
செயற் கரிதாகிப்
போயுழைப் புனக் கெளியதா யிருந்தவிப்
புதுமையென் புகனின்றே.

நீ மெஞ்ஞான நல் நிட்டை சாருதல் அரிது எனவும் நெஞ்சகமே சற்று ஓய்விலாது செய்தியானம் ஆதிகள் எளிது எனவும் உன்னு நின்ருய். எ-து நெஞ்சமே நீ அது வென்றும் இதுவென்றும் ஒன்றனையுஞ் சுட்டி நினையாது சும்மாவிருக் கின்ற உண்மை ஞானமாகிய நல்ல நிட்டை கூடுதல் அரிய தெனவும் ஓரணுவளவாயினும் நினைவு ஒழியாது செய்யா நின்ற தியான செப சிவபூசை முதலிய செய்குதல் எளிய தெனவும் கருதா நின்றனை,-சேய்கடம் மினத்தாய் கொல், எ-து ஆகலின் அன்னை நீராட்டல் முதலிய உபசாரங்களைச் செய்து மலரணை யில் இருத்தவும் அவ்விடத்திற் சுகத்திற் சும்மாவிராது புறத்து எழுந்து ஓடி வருந்துஞ் சிறு பிள்ளைகளது கூட்டத் தினையுடையையோ நீயும்,—சும்மாவிருக்குதல் செயற்கு அரி தாகிப் போய் உழைப்பு உனக்கு எளிதாயிருந்த இப்புதுமை என் புகல் நின்றே எ-து. தியானமாதிகளை மனமொழி மெய் களினுற் செய்யாது சும்மாவிரு நீயென்று நான் கூற அங்ஙனம் இருக்குதல் செய்தற்கு அரிதாய் அவற்றைச் செய்குவல் என்று



சென்று வருந்தும் வருத்தம் உனக்கு எளிதாயிருந்த இப் புதுமை யென்னையோ? யாவர்க்குஞ் சும்மாவிருத்தல் எளிது; ஓடித் திரிதல் அரிது; அவர்களுக்கு அங்ஙனமிருப்ப உனக்கு இங்ஙனம் இருந்த இதனை நீ நின்று எனக்குச் சொல்லுக வென்று விவேகங் கூறிற்று எ-று.

மனமாதி முக்கரணங்களும் அசையாது நின்ற விடம் மெஞ்ஞான நிட்டையென்பதும், அவை அசைந்து செய்யுந் தியான சமாதிகள் அந்நிட்டை வருவதற்கு ஏதுவென்பதும் அறிக.

மெய்ஞ்ஞான நிட்டை யென்பதற்கு உதாரணம்:- கந்த ரனுபூதி;

''செம்மான் மகளைத்திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மாவிரு சொல்லற வென்றலுமே
அம்மா பொருளொன்று மறிந்திலனே''

சேய்கள் தம் இனத்தாய் கொல் என்பதற்கு உதாரணம்:— ஞானவாசிட்டம்.

மிகமுயன்று வகுந்தாமற் சமமாகின்ற
வேண்டு கொளாற்றன் முயல்வால்
விஞேதந் தன்னுல்

பகர் மனமாஞ் சிறு மகவை நிறுத்தல்
வேண்டும் பலபிறப்பிற் பரிசயங்க
ளகலப் பண்ணி

அகல் சுபவாதனையு தித்தான் முயற்சிப் பேரும்
ஐயுறினுஞ் சுபமுயல்வை
யதுதீ தல்ல

திகழ்மனம் போய்த் தற்பதத்தைத் தெளியுமட்டுந்
தேசிகனாற் சொல்வழியில்
செல்லு வாயே.

மற்றும் வருவனவற்றாற் காண்க.

அசைவற நிற்றல் நேரே வீட்டை அடைதற்கு ஏது வாகலின் அதனையே இன்னும் வற்புறுத்தி மேற்கூறுகின்றது.

(23) நின்று றாதலை குதல்விருப் புனக்கதை
நீத்திருக்குதல் நெஞ்சே
என்ற னக்குநல் விருப்பு வாளாவி
வணிருத்தல் தீதுயர் வீடு
சென்று காண்குவ லெனநினைந்
தலைதியோ சிவன்றிரு சியமன்றால்
ஒன்று நீயுனா திருப்பதே யதைத்தொடர்
உபாய மென்றறி கண்டாய்.

நீன்றுறாது அலைகுதல் விருப்பு உனக்கு அதை நீத்திருக் குதல் நெஞ்சே என்றனக்கு நல்விருப்பு. எ-து அசைவற நில்லாது தியானமாதிகளைக் கருதி அசைகுதல் உனக்கு நல் விருப்பம் அவ்வசைவை விட்டுச் சும்மாவிருக்குதல் நெஞ் சமே எனக்கு நல்விருப்பம் என்று விவேகங்கூற அதற்கு, இங்ஙனஞ்சும்மா விருந்தால் எங்ஙனம் வீடு அடைகுதும் என்று மனங் கேட்ப,—வசளா இவண் இருத்தல் தீது உயர் வீடு சென்று காண்குவல் என நினைந்து அலைதியோ, எ-து சும்மா இவ்விடத்தில் இருக்குதல் குற்றம் மேலாகிய வீட்டினைத்தியான முதலிய நன்மார்க்கத்திற் சென்று அறிவே னென்று கருதி அலைகின்றனையோ நீயென்று விவேகங் கேட்ப, அதற்கு நம் இருவருக்கும் வீட்டை அடைகுவதே கருத்து ஆகலின் நீ செல்லும் நெறியால் அதனை அடையலா மெனின் நீ கூறியவாறு யான்கேட்கின்றேன் யான்செல்லும் நெறியால் அதனை அடையலாம் எனின் யான் கூறியவாறு



நீ கேட்குதியென்று விவேகங்கூற, அதற்கு நன்று கூறினீர் என்று மனஞ்சம்மதிப்ப,—சிவன் திருசியம் அன்றால் எ-து. அதற்கு நீ கருதிய தியானாதிகளால் வீட்டினையடையலா மெனின் அவ்வீடு மனாதிகளால் அறியுங் காட்சிப் பொருள் அன்றென்று விவேகங்கூற அதற்கு நீ இங்ஙனம் கூறிய வற்றால் எனது உபாயத்தால் அதனை அடைதற்கு அரிது; அதனை அடைதற்கு எனக்கு ஒருபாயம் நீர் கூறுக வென்று மனங்கேட்ப ஒன்றும் நீ உனாதிருப்பதே அதைத்தொடர் உபாயம் என்று அறி கண்டாய் எ-து அதற்கு அணுவள வேனும் ஒன்றையும் நினையாது அசைவற இருத்தலே அவ் வீட்டை அடைதற்கு நேரே உபாயமா மென்று அறிவாயாக வென்று விவேகங் கூறிற்று எ-று சிவம் என்பது - வீடு.

இதற்கு உதாரணம்: ஆனந்தத்திரட்டு.

வாங்கி யைம்பொறி நின்றமனத்தினை
நீங்கிடா வகை நின்னுளிருத்தியே
தீங்கியாவையும் சிந்தை செயாமையாம்
பாங்கியாததுவே பயில் வாயரோ.

என்றும், தேவிகாலோத்திரம்.

மந்திரஞ் செபந்தியானம் பூசனை வணக்கம் வேண்டா
வந்தமிலாத முத்திக் குபாயமே யறிய வேண்டுஞ்
சிந்தனை புறனே செல்லிற் றுயரமே திரியமீட்கிற்
பந்தமாந்துன்ப நீங்கிப்பரமான வின்பஞ்சேர்வார்.

என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க. (23)

வீட்டை யடைதற்கு உபாயம் அசைவற நிற்றல் என்று கூறினீர்; இனி அசைவற நிற்றற்கு உபாயமும் அங்ஙனம் நின்றால் வீடுவருமாறும் எங்ஙனம்? என்று மனங்கேட்ப அதற்கு, மேற்கூறுகின்றது.

(24) கண்டவைம் புலக்காட் சிபோய்க் காட்சியாற்
கலந்த வாதனை யாவும்
விண்டு மூடமற்றலை யிலாக் கடலென விளங்கினை
யெனின் நெஞ்சே
உண்டுகொல் நமக்கொரு துயராங்கு
வீடுளங்கையிற் கனியேயாம்
பண்டைமே வியபய மெலாமறுங்
குருபதத்திலும் புகலாமே.

கண்ட ஐம்புலக்காட்சி போய்க் காட்சியாற் கலந்த வாதனை யாவும் விண்டு மூடம் அற்று அலையிலாக்கடலென விளங்கினை யெனின் நெஞ்சே எ-து ஐம்பொறிகளாற் காணப்பட்ட சத்தாதி விடயக் காட்சிகளும்போய் அவ்விடயக் காட்சியாற் கரணத்தில் ஏறியிருந்தவாசனைகள் அனைத்தும் விட்டு நீங்கி இவ்வாசனை முடிவில் தோன்று மறைப்பும் அற்று [1]நிர்த்தரங்கசமுத்திரம் போல விளங்கா நின்றனை யானல் நெஞ்சமே, உண்டுகொல் நமக்கு ஒருதுயர் ஆங்கு வீடு உளங்கையிற் கனியேயாம் எ-து பிறவித்துன்பங்களுள் ஒரு துன்பமாயினும் நமக்கு உண்டாமோ அவ்விடத்து வீடு உள்ளங்கை நெல்லிப்பழம் போலவுண்டாம் பண்டைமேவிய பயம் எலாம் அறும் குருபதத்திலும் புகலாமே. எ-து முன்னர்ப் பொருந்தியிருந்த பிறவித் துன்பத்திற்குப் பயந்த பயமனைத்தும் நீங்கும்; குரு துரியத்தையும் யாம் அடையலாமென்று விவேகங் கூறிற்று எ-று. கேவல சகலங்களினன்றிச் சுத்த நிலையில் துன்பம் இன்மையால் ஒருதுயருண்டு கொல் நமக்கு என்றும் அச்சுத்த நிலைபெற்றோர் குரு துரியமும் அடைவராகலின் குரு பதத்திலும் புகலாமே யென்றுங் கூறப்பட்டன

இதற்கு உதாரணம். சசிவர்ணபோதம்.

"வினவிற் பரத்தை யறிவுறுதற்கு
அவத்தைபுலன்வினை மாறியே

---

1. அலையிலாக் கடல்



நனவிற் சுழுத்திநிலை வரினப்
பொருட்டி கழு நலனாகவே"

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க. (24)

அசைவற நிற்றற்கு உபாயம் ஐம்புலக் காட்சியும் கரண வாசனையும் மறைப்பும் நீங்குத லென்று கூறினீர். அக்கரண வாசனையும் மறைப்பும் நீங்குதற்கு முன்னர் ஐம்புலக் காட்சி நீங்கவேண்டு மாகலின் இக்காட்சி நீங்குதற்கு உபாயம் எங்ஙனமென்று மனங்கேட்ப அதற்கு மேற் கூறுகின்றது.

25. புகல ரும்பரப் பிரமமாங்
கடல்தனில் புணர் பரைத்திரையீசன்
சகமொ டாருயி ரெனுநுரை
யாதிக டந்துமாற் றிடுமென்றே
பகரு நான்மறை யெனினதி
லெதையெதைப் பற்றுவாம் விடுகிற்பாஞ்
சுகசொ ரூபமே யனைத்துமென்ற
கற்றுதி துவித பாவனை நெஞ்சே

புகலரும் பரப்பிரமமாம் கடல்தனில் புணர் பரைத்திரை ஈசன் சகமொடு ஆருயிர் எனும் நுரை ஆதிகள் தந்து மாற்றிடும் என்றே பகரும் நான்மறை எனின். எ-து வாக்கு மனாதீதமாய் இருக்கின்ற பரப்பிரமமாகிய கடலின்கண் விட்டு நீங்காத பரையாகியதிரையானது ஈசுரனும் நாததத்துவ முதற் பிருதிவிதத்துவ மீறாகிய சகங்களும் சராசரங்களாயுள்ள உயிர்களும் என்று சொல்லப்பட்ட நுரை திவலை குமிழிகளைத் தோன்றச் செய்து ஒடுக்குமென்று நான்கு வேதங்களுஞ் சொல்லும் எனின்—அதில் எதைஎதைப் பற்றுவாம் விடுகிற்பாம். எ-து அக்கடற்றிரையில் தோன்றிய இப்பிரபஞ்சத்தினுள் எதனை எமதென்று பிடிப்பம்; எதனை எமதன்று என விடுப்பம். இங்ஙனம் பற்றுதற்கும் விடுப்பதற்கும் அப்பிரமத்தை விடவேறின்மையால்,—சுகசொரூபமே அனைத்தும் என்று அகற்றுதி துவிதபாவனை நெஞ்சே. எ-து எல்லாவற்றையும்

ஆனந்த சொரூபமென்று இந்நிச்சய ஞானத்தால் நெஞ்சமே அது இது என்று பகுக்கும் துவிதபாவனையை நீ நீக்குதியென்று விவேகங் கூறிற்று எ - று.

பிரமத்திற்கு அபின்னமாயிருக்கின்ற பரையசைவான மாயையிற் பிரபஞ்சந் தோன்றி ஒடுங்குதலின் அப்பரை திரையென்று கூறப்பட்டது. உயிரென்பது [1]தானியாகு பெயர். ஆகமநெறி கூறி வேத நெறி கூறுதல் மற்றென்று விரித்தல் என்னும் குற்றமாகாதோ வெனின் இந்நூல் சமரச நெறியாகலாலும் ஆகமத்திற் சோகம் பாவனை கூறுதலாலும் குற்றமாகா தென்பது அறிக.

இதற்கு உதாரணம் : திருவம்மானை

பார்த்த இடமெல்லாம் பரமன் காண் அம்மானை
பாராமல் இந்நாளும் பாழ்பட்டேனம்மானை

என்றும், சிவானந்தமாலை

எங்குஞ் சிவமொழிய இல்லையவன் தன்னுணை
யங்கந் திரள்கருவி யாணவமாம்—பொங்குமிருண்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய்.

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

ஐம்புலக்காட்சி நீங்குதற்கு உபாயங் கூறினீர். இனி நினைப்பும் மறப்பும் அற்றுச் சமநிலையில் நிற்றற்கு நானுவுபாயமும் நீர் கூறல் வேண்டு மென்று மனம் கேட்ப அதற்கு மேற் கூறுகின்றது. (25)

1. தானத்திலிருப்பது தானி—உயிராகிய தானியின் பெயர் அதற்குத் தானமாகிய உடற்கானது. ஆகுபெயரை வட மொழியில் இலக்கணை யென்பர்.



26. நெஞ்ச மேயினிப் பாவனு
தீதமாய் நின்றிடின் றெனினிற்பாய்
எஞ்சுருதகல் புரணபாவனை
யையோர்ந் திலையெனினுல கெல்லா
மஞ்சனக்களன் மேனியென்
றோர்ந்திலை யெனினருள் சுரந்தெம்பால்
வஞ்சமற்றிடும் படிக்கிவண டைந்ததோர்
வடிவை யோர்ந் துய்வாயே.

நெஞ்சமேயினிப் பாவனாதீதமாய் நின்றிடு. எ - து, நெஞ்சமே இனி ஒன்றையும் சுட்டிப்பாவியாது பாவனாதீதமாய் நிற்றலைச்செய்—இன்றெனின் நிற்பாய் எஞ்சுருது அகல் புரண பாவனையையோர்ந்து எ - து. அங்ஙனம் நிற்றற்கு வலியில்லை எனின் அணுதிரணகாஷ்ட முதலியவற்றினுங் குறைவுபடாது விரிந்த பரிபூரண பாவனையாயினுங்கருதி நிற்பாய்.- இலை யெனின் உலகெலாம் அஞ்சனக்களன் மேனியென்று ஓர்ந்து, எ - து. அஃதும் இன்றெனின் சடசித்தாய் விளங்காநின்ற இப் பிரபஞ்சமெல்லாம் காளகண்டத்தினையுடைய சிவபெருமானது அட்டமூர்த்த மென்று ஏகபாவனை பண்ணிநிற்றி.— இலையெனின் அருள்சுரந்து எம்பால் வஞ்சம் அற்றிடும்படிக்கு இவண் அடைந்தது ஓர்வடிவை ஓர்ந்து உய்வாயே. எ - து அஃதும் இன்றெனின் அச்சிவந்தானே கிருபைநிரம்பி எம்மிடத்துள்ள மும்மலங்களும் அறும்படிக்கு இந்நிலத்தின் கண் மானுடச்சட்டை சாத்தி எழுந்தருளிவந்த ஒப்பற்ற குருமூர்த்தத்தை இடைவிடாது தியானித்து நிற்றி, பிழைப்பை யென்று விவேகங்கூறிற்று எ - று.

நிற்பாய் என்றதனை மற்றிரண் டிடத்திலுங்கூட்டிக் கொள்க. உய்வாய் என்பதனைக் கடைநிலைத் தீபக மாகக் கொண்டு எல்லாவற்றோடுங் கூட்டுக. தன்னைக்காட்டாது உயிரைமறைத்து நின்று வஞ்சித்தலின் ஆணவம் வஞ்சம் எனப்பட்டது.

பாவனாதீதமாய் என்றதற்கு உதாரணம் : ஞானவாசிட்டம்.

அறிவெனும் விதை சங்கற்பமா
முளையா மனைய சங்கற்பமாந்தன்னைப்
பிறிவுறத்தானே செய்துதான்
பிறக்கும் பெரிதுறவளர்ந் திடுந்தானே
செறிதுயரொழிய வின்பமொன் றில்லை
' யாதலால் செப்பு சங்கற்ப
நெறியுற நினையேல் நிற்புறு
நிலையில் நிமிடமும் பாவனை நினையேல்.

பூரணபாவனை யென்பதற்கு உதாரணம்: குறுந்திரட்டு

அண்ட மெண்டிக் கெங்கனும்
அடங்கச் சூனிய மதாகக்
கண்டுகொண் டிருக்கக் கண்ட கருத்தையும்
அறவே விட்டால்
அண்டமெண்டிக் கெங்கனுமாய்
நின்ற ஆனந்தத்தைக்
கண்டுகொண்டிருக்கும் வண்ணம்
கணத்தில் வந்துதிக்கு மன்றே

உலகெலா மஞ்சனக் களன் மேனி யென்றதற்கு
உதாரணம்: திருவாசகம்

நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப்
புணர்ந்து நின்றான்
உலகே ழெனத் திசை பத்தெனத் தானொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ.

வஞ்சமற்றிடும் படிக் கிவணடைந்ததோர் வடிவை
ஓர்ந்து என்பதற்கு உதாரணம்: தத்துவராயர்.



உள்ளத் திருந்து மொளித்தான் பரன்குரவன்
கள்ளந்தனைத் தவிர்த்துக் காட்டினான்—வள்ளல்
அருவான கோலமோ வக்கோலங் காட்டும்
குருவான கோலமோ கூறு.

மற்றும் வருவனவற்றுற் காண்க. (26)

உன்னுகின்றனை யென்னும் பாட்டு முதலிய பதினெண் பாட்டாலும் ஞானத்திற்கு விலக்காயுள்ள துர்க்குணங்களெல்லாம் விடுவித்து மெய்ஞ்ஞானங்கூறி நிட்டை கூட்டி மேல் ஞானசாரங் கூறுகின்றது.

27. உய்து நெஞ்சமே வாக்கினை மௌனமாக்
கிலை யெனி னுளதே சொல்
மெய்த ருஞ்சொலும் பொய்நயம் பயக்கிலா
விடத்தின் அதுடைத் தேனும்
பொய்தருஞ் சொலியான் செய்தேன் பிறர்
செய்தார் எனினவை போனலு
மெய்த ருஞ்சிவ மன்றிதென் றென்றை நீ
யிசைத்தல் பொய்யெனத் தேரே.

உய்து நெஞ்சமே வாக்கினை மௌன மாக்கு எ-து நெஞ்சமே ஞான நிட்டையை இடைவிடாது கூடி அஞ்ஞானத்தின் வசப்படாது திருவடியை யடைந்து யாம் பிழைப்போம் நீ ஒருரையும் கூறாது வாக்கினை மௌனம் பண்ணுதல் செய், —இலை யெனின் உளதே சொல். எ-து. அஃது இன்றெனினும் வினோதத்தாலாயினும் ஒரு பொய்மையுங்கூறாது உண்மையே சொல்லுக,—மெய்தருஞ்சொலும் பொய், எ-து. அங்ஙனம் மெய்மையாயுள்ள சொல்லும் பொய்மை யென்று விவேகங்கூற அதற்கு வினோதத்தாலாயினும்ஒரு பொய்மையுங் கூறற்க என்று முன்னர்க் கூறினீர் இப்போது அம்மெய்மை கூறலும் பொய்மை என்றீர். இது என்னையென்று மனங் கேட்ப நயம்பயக்கிலா விடத்தின் எ-து அதற்கு அம்மெய்மையாற் சீவகருணையாய நன்மை உண்டாகாதவிடத்து அது

பொய்மையா மென்று விவேகங்கூற, அதற்கு இது உண்மை யென்று மனஞ்சம்மதிப்ப,—அது உடைத்தேனும் பொய் தருஞ்சொல், எ-து அதற்கு சீவகருணையைக் குறித்துப் பொய்மை போன்ற மெய்மை கூறுவது உளதாயினும் அம் மெய்மையும் பொய்மையுடைய சொல்லென்று விவேகங்கூற அதற்கு முன்னே மெய்மைகூறினுஞ் சீவகருணையின்றிய விடத்துப் பொய்மையென்றீர், இப்போது பொய்மை போன்ற மெய்மை கூறுவது உளதாயினும் இஃதும் பொய்மையென்றீர் இது என்னை யென்று மனங்கேட்ப—யான் செய்தேன் பிறர் செய்தார் எனின், எ-து. அதற்கு இருவினைக்கீடாகத் திருவுள நடத்துதலை மறந்து உன்னால் ஒருயிர் காக்கப்பட்டவிடத்து அதனைப்பிறர் கொலைசெய்யவந்தார் யான் காத்தேன் என்று இங்ஙனம்யான் செய்தேன் பிறர் செய்தாரென்று சொல்லுவாயெனி னென்று விவேகங்கூற அதற்கு இதுவும் உண்மையென்று மனஞ்சம்மதிப்பது -- அவை போனாலும் எய்தரும் சிவம் அன்று இது என்று ஒன்றை நீயிசைத்தல் பொய் எனத்தேரே, எ-து நீ யான் செய்தேன் பிறர் செய்தார் என்று சொல்லும் இப்பொய்மைகள் சொல்லாது ஒழியினும் பெறுதற்கரிய சிவமன்று ஈதென்று ஒரு அணுதிரணங்களை யாயினும் வேறு பிரித்துச் சொல்லுதலும் பொய்மையென அறிதியென்று விவேகங்கூறிற்று. எ-று.

மெய்மைகூறுதல்—பாசவைராக்கியம். சீவர்களைப்பாது காத்தற் பொருட்டுப் பொய்மைகூறல்-சிவகருணை. யான்செய் தேன் பிறர் செய்தார் என்று சொல்லா தொழிதல்-ஈசுர பக்தி எல்லாஞ்சிவமெனச் சொல்லுதல்-பிரமஞானம். ஆகிய இந் நான்கும் இதனுட்காண்க.

வாக்கினை மௌனமாக்கு என்பதற்கு உதாரணம்- திருவள்ளுவ நாயனார்.

யாகாவாராயினு நாகாக்க காவாக்காற்
[1] சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

---

1. துன்பப்படுவர்.



உளதே சொல் என்பதற்கு உதாரணம்.

[1] புறந்தூய்மை நீரானமையும் அகத்தூய்மை
வாய்மையாற் காணப்படும்.

மெய்தருஞ்சொலும் பொய்மையென்பதற்கு உதாரணம்:

பொய்மையும் வாய்மை [2]யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின்.

யான் செய்தேன் பிறர் செய்தார் என்பதற்கு உதாரணம் சிவஞானதீபம்.

விரும்புற்ற தவம்விரதஞ் சீல மெல்லா மேல்வினைவென்
றறிந்தெவையும் விமலன் கூத்தென்
றிரும்புற்ற மனமழலின் மெழுகா யென்று மியான் செய்தேன்
பிறர் செய்தா ரெனுங் கோள் நீக்கி
யரும்புற்றங் கெண்ணுதியா னென்னும் பாசத்தவாமரு
புறப்பற்றோ டகப்பற்றுன [வும்
பெரும்பற்றை யகன்றருளைப் பெறுவோர் ஞானப்
பெரும்பற்றப் புலியூரைப் பிரியார் தாமே.

எய்தருஞ்சிவமன்றி தென் றொன்றை நீ யென்பதற்கு உதாரணம்: சிவானுபூதி விளக்கம்.

"வெறுப்பு விருப்பென்று வேறுபொருள் கோடவிறை
யுறுப்பிற் குறையாதோ வுணர்வுடையோர் சொல்லுவரோ"

மற்றும் வருவனவற்றுற் காண்க.

---

1. உடம்பு, 2. சேர்ந்ததாம்.

இப்பாட்டால் வாக்கால் தீமையடையாது அடக்குதற்கு உபாயங் கூறியவாறு காண்க. (27)

28. தேரினிவ்வுடல் சமாதியி லசைவறச் சித்திர
தீபம் போற்
சார வைத்திட.·. தில்லையேற் குருபரன்
றனதரும் பணிமேற்கொள்
நேரு மூழ்வழி தொழில் பிறி தடையினும்
நெஞ்சமே யுயிர்க்கெல்லாம்
பேரி தஞ்செய்வித் திடு, முடை கெழுமலப்
பிணக் கிதஞ் செய்யேலே

தேரின் இவ்வுடல் சமாதியில் அசைவறச் சித்திரதீபம் போல் சாரவைத்திடு. எ-து செய்தொழிலை விசாரிக்கு மிடத்து இவ்வுடம்பினைச் சித்திரத்தில் எழுதிவைக்கப்பட்ட தீபம்போல் ஞான சமாதியில் அசைவின்றி ஆதனங்கட்டும் இலக்கணத்தோடும் பொருந்த வைக்குதலைச் செய்,-அஃதில்லையேல் குருபரன் தனது அரும்பணிமேற்கொள், எ-து. அது இன்றாயில் குருவாகிய ஞானபரனது அரிய ஏவற் பணி விடைகளைச் சிரசில் வகித்துக் கொள்ளுதி,—நேரும் ஊழ்வழி தொழில் பிறிது அடையினும் நெஞ்சமே உயிர்க்கெல்லாம் பேர் இதஞ் செய்வித்திடு எ-து. அ·.தின்றி வந்து பொருந்து கின்ற பழவினைப்படியே உனக்கு இன்றியமையாத வேறு சற்கருமங்களைச் செய்தியெனினும் நெஞ்சமே அக்கருமங்களாற் கொலைவாராது சராசர மாயுள்ள உயிர்களுக்கெல்லாம் பெரிதாய இனிமையை இவ்வுடம்பாற் செய்விக்குதலைச் செய்,—முடை கெழுமலப் பிணக்கு இதம் செய்யேலே. எ-து அங்ஙனம் செய்தலன்றி முடை நாற்றம் பொருந்தியமலங்கள் நிறைந்துள்ள இவ்வுடம்பாகிய பிணத்திற்கு இனிமை செய்யற்க நீயென்று விவேகங் கூறிற்று. எ-து. ஏவற் பணிவிடையைச் சிரசிற்கொள்ளுதல் பணிவிடை அருமை தோன்றக் கூறியது, உயிர்க்கெல்லாம் என்ற பொதுமையால் அசரவுயிருஞ் சொல்லப்பட்டது. சமாதியில் அசைவற இருக்குதல்—பிரமஞானம் குருபரன் பணி செய்தல் ஈசுரபத்தி. சீவர்களுக்கு



இதஞ் செய்வித்தல்—சீவகருணை, உடம்பிற்கு இதஞ்செய்யாதொழிதல்—பாசவைராக்கியம் ஆகிய இந்நான்கும் இதனுட் காண்க.

இவ்வுடல் சமாதியில் அசைவற என்பதற்கு உதாரணம்: தத்துவராயர்.

செவ்வே யுடலுஞ் சிரமுங் கழுத்துமுற
வெவ்வா தனத்தி லிருந்தவர்க்கும்—கைவந்தால்
வாத முதனோய் நலியா மதியுடையோர்
ஆதன மென்ப தது.

குருபரன்றனது அரும்பணி செய் என்பதற்கு உதாரணம்: ஒழிவிலொடுக்கம்.

உடற்குயிர் போற்கட் கிமைபோல் ஊசிநூ லொத்து
விடிற்புலிதீ பாம்பினில் வீழ் வார்க்காஞ்—சுடர்ச்சுடினும்
வாழைக்கா காவேதி மட்கலத்துக் காகாவாறு
ஏழைக்கா காத திது.

உயிர்க்கெல்லாம் பேர் இதம் செய் என்பதற்கு உதாரணம்: திருவள்ளுவ நாயனர்.

அறிவினல் ஆகுவ துண்டோ பிறிதினேய்
தன்னேய்போற் [1]போற்றுக் கடை.

முடைகெழுமலப் பிணக்கிதஞ் செய்யேல் என்பதற்கு உதாரணம்: திருவாசகம்.

பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும்
பொழுகிய பொய்க்கூரை
யித்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற்
சுழித்தலைப் படுவேனை

1. காப்பாற்று விடத்து.

முத்துமாமணி மாணிக்க வைரத்த
　　பவளத்தின் முழுச்சோதி
அத்தனுண் டுதன் னடியரிற் கூட்டிய
　　அதிசயங் கண்டாமே.

மற்றும் வருவனவற்றுற் காண்க. (28)

29. செய்யு நந்தொழி லைந்தொழி லியாமுமச்
　　சிவனது வடிவென்றே
யைய மற்றுண ராதியா னெனுஞ்செருக்
　　கடைந்துநாடொறு நெஞ்சே
நைவதென்னைநீ பஞ்சகோ சங்களு
　　நாமலவெனு வுண்மை
கையிலா மலகம்மென வுனக்கியான்
　　கழறியுந் தெளியாயே.

செய்யுநந்தொழில் ஐந்தொழில் என்பது, செய்யாநின்ற நமது தொழில்கள் யாவும் சிவனது சிருட்டி முதலிய வைந் தொழில்களே யாமென்று விவேகங்கூற, அதற்கு யாம் செய்யும் தொழில்கள் அவன் செய்யும் தொழில்கள் எங்ஙனமாமென்று மனம் கேட்ப,—யாமும் அச்சிவனது வடிவு என்றே ஐயம் அற்று உணராது யானெனும் செருக்கு அடைந்து நாடொறும் நெஞ்சே நைவது என்னை நீ எ-து. அதற்கு, சிவனது அட்டமூர்த்தத்தில் யாம் ஒன்ருகலின் யாமும் அச்சிவனது அங்கந்தானேயென்று ஐயந்திரிவுகளின்றி நிச்சயம் பண்ணிக் கொள்ளாது அச்சிவனைவிட வேறு யானென்று உணரும் மயக்கத்தை அடைந்து எப்போதும் நெஞ்சமே நீமெலிவது என்னை, —பஞ்சகோசங்களும் நாமல எனு உண்மை கையில் ஆமலகம் என உனக்கு யான் கழறியும் தெளியாயே. எ-து. மாயா காரியமாகிய அன்னமய முதல் ஆனந்தமய மீருகச் சொல்லப்பட்ட பஞ்சகோசங்களும் இவற்றைக் கடந்திருந்த அறிவாகிய யாம் அன்றென்று உண்மையாகிய உபதேச மொழிகளால் உள்ளங்கை நெல்லிப்பழம் போலப் பிரத்தியட்சமாக உனக்கு



யான் தெளியக்கூறியும் தெளிந்திலாய்; இது என்னை யென்று விவேகங்கூறிற்று, எ-று.

உயிர்சிவனது வடிவாகலின் இதனது தொழிலும் சிவனது தொழிலென்பது அறிக. பஞ்சகோசங்களாவன அன்னமய கோசம் பிராணமய கோசம் மனோமயகோசம் விஞ்ஞானமய கோசம் ஆனந்தமயகோசம் என்பவை யாமெனக் கொள்க. உண்மையென்பது உண்மையாகக் கூறிய உபதேச மொழிகள் மேல் நின்றது.

இதற்கு உதாரணம் அறிவானந்த சித்தியார்.

அன்னமயங் கொண்டெடுத்த
　உடல்களும் ஆயிழையும்
பின்னமுடன்வரு பிள்ளையும்
　சுற்றமும் பேருலகில்
மன்னு நரைதிரை மூப்பினு
　நோயினு மாளக்கண்டும்
துன்னு மறிவில ரான்மாவிது
　வென்று சொல்லுவரே.



எ-ம்

ஊசும் உடலின் உழல்கின்ற காற்றை யுணர்வென்பரே
ஏசுமுறக்கத் தியங்கியும் இங்குஅறி வேதுமற்று
வீசும் பிராணனை ஆன்மா அலவென்று வேதம்சொல்லும்
பேசுமனிதர் பொருளறியாமற் பிதற்றுவரே.

எ-ம் தனக்கு மனது சலித்ததென்றே
　　சொல்லித் தானிருந்தும்
உனக்குவிசார முண்டாயிற்சொல்லென்
　　றிங்குவந்து நின்றும்

எனக்கு இங்கறிய வொண்ணுதென்று
சொலகின்ற வேளைகள் தாம்
நினைக்கத் தனக்கறி வில்லா
மனத்தை நிலையென்பரே.

எ . ம். இணங்கு [1] நவகுண மெய்துமிப்
புத்தியை யின்றுபுத்தர்
வணங்கும் விஞ்ஞான மயம்பொருள்
என்றமதி யின்மைபோல்
பிணங்கு நிலைவிட்டுக் கேளாய்
மறையின்று பின்னமறக்
குணங்குறி யின்றி யிருக்குமான்
மாவென்று கூறிடுமே.

சேருஞ்சுகம் பொருள் என்றனை துக்கஞ்செறியும் பொழுது
ஆரும்சுக துக்கியாகி யிடுநிலை யன்றிமறை
தேருநிர திசயானந்தமே சிதைவற்ற பொருள்
கூருநிலையை யறியார் அழிசுகங் கொள்ளுவரே.

மற்றும் வருவனவற்றுற் காண்க.

(29)

30. தெளிவு உயிர்க்கு அரன்விளக்குதல்
மயக்கவன் றிரோபவிக் குதறேகம்
விளிவையுற்றல் சங்காரமிங் கிதாகித
மேவுத றிதிதோற்ற
முளசிருட்டியே லம்பை நோதலின்னுனையும்
பிறரையு நாடித்
தளர்வது மகிழ்வது மடைந்துள்ளமே
சம்புவை மறந்தாயே.

---

1. நவகுணம்:-சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு, முயற்சி, தருமம் அதருமம், சமஸ்காரம், ஞானம்.



தெளிவு உயிர்க்கு அரன் விளக்குதல் மயக்கு அவன் திரோபவிக்குதல் எ - து. உயிர்களுக்கு யாதோர் முன்னிலை யால் தெளிவு வருமாயினும் அஃது சிவன் அனுக்ரகம் பண்ணு தல், அவைகளுக்கு யாதோர் முன்னிலையால் மயக்கம் வருமா யினும் அஃது அவன் திரோபாவஞ் செய்குதல்,—தேகம் விளி வையுற்றல் சங்காரம் எ - து. தேக நாசத்தையடைதல் யாதோர் முன்னிலையால் வருமாயினும் அ∴து அவனது சங் காரம் இங்கு இதாகிதம் மேவுதல் திதி எ-து. சுகதுக்கங்களைப் பொருந்த இவ்விடத்து யாதோர் முன்னிலையால் வருமாயினும் அ∴து அவனதுதிதி, தோற்றமுள சிருட்டியேல் எ - து. உற்பத்தி யாதோர் முன்னிலையால் வருமாயினும் அ∴து அவனுக்குள்ள சிருட்டி. இங்ஙனம் கூறிய முறையே சடசித்துக்களெல்லாம் இருவினைக்கீடாக நடத்தும் அவனது பஞ்சகிருத்தியத்தின்படியே நடக்குமானல்.—அம்பை நோத லில் உனையும் பிறரையும் நாடித் தளர்வதும் மகிழ்வதும் அடைந்து உள்ளமே சம்புவை மறந்தாயே. எ - து. அவன் செய்யும் பஞ்சகிருத்தியங்களை நாடாது எய்தவன் இருக்க அம்பை நோவதுபோல் யான் செய்தேன் பிறர் செய்தாரென்று உன்னையும் பிறரையும் கருதிக்கொண்டு துன்பம் வந்ததென்று வாட்டமும் சுகம் வந்ததென்று பூரிப்பும் அடைந்து நெஞ்சமே சிவனது திருவடியை மறந்தாய் அ∴து என்னை யென்று விவே கங் கூறிற்று எ - து.

அம்பை நோதலின் எனவே எய்தவன் என்பது வருவிக்கப் பட்டது. அவன் அவள் அது வென்று மூன்றும் பிறர் என்பதனுள் அடங்குமாதலின் பி ற ர் எனப்பட்டது. கடற்றிரைபோற் சுகதுக்கம் ஓய்வின்றி வருவதால் அவற்றைச் சமபாவனை பண்ணுது வேறுபிரித்துப் பாவிப்போர்க்கு அவை மயமாதலே யன்றித் திருவடியை நினைக்கக்கூடாமையிற் சம்புவை மறந்தாயே யென்று கூறப்பட்டது. இப் பஞ்சகிருத் தியங்களுள் உயிரிடத்து அநுக்கிரகமும் [1] திரோபாவமும் உடம்பினிடத்துச் சங்காரமும் திதியும் சிருட்டியும் வருமாறும்

---

1. மறைப்பு. மயக்கு.

அநுக்கிரகத்திலும் [1] இதத்திதியிலும் சிருட்டியிலும் இன்பமும் திரோபாவத்திலுஞ் சங்காரத்திலும் [2] அகிதத்திதியிலும் துன்பமும் வருமாறும் காண்க.

இதற்கு உதாரணம் : திருவாசகம்

நாயிற்கடையா நாயேனை நயந்து
நீயே ஆட்கொண்டாய்
மாயப்பிறவி உன்வசமே வைத்
திட்டிருக்கு மதுவன்றி
ஆயக்கடவேன் நானேதான் என்னதோ
இங்கு அதிகாரம்
[3] காயத்திடுவாய் உன்னுடைய [4] கழற்கீழ்
வைப்பாய் [5] கண்ணுதலே

மற்றும் வருவனவற்றுற் காண்க : இப்பாட்டாற் சிவனது பஞ்சகிருத்தியத்தை நாடி இருவினையும் நீங்குதற்கு உபாயங் கூறியவாறு காண்க: (30)

**31.** மறைத்தலும் நினைத்தலுஞ் செயுமாணவ
மாயைநின்றவை தம்மைத்
துறத்த லேயிராப் பகலகல் வீடெனச்
சொல்வரத் துறவெய்தக்
குறித்தி டிற்பர பத்திஞா னத்தினுற்
கூடுமற்றவை நெஞ்சே
நிறத்த பத்திநஞ் செயல றினுமறி
னின்ற மற்றெ ன்றுமே.

மறைத்தலும் நினைத்தலும் செயும் ஆணவம் மாயை நின்றவை தம்மைத் துறத்தலே இராப்பகல் அகல் வீடெனச் சொல்வர். எ - து. நமதுள்ளே எக்காலமும் நின்று கேவலமாய்

1. நன்மைசெய்தல் 2. தீமைசெய்தல் 3. பந்தம் 4. முத்தி
5. நெற்றிக்கண்ணுடையவர்.



மறைத்தலையுஞ்சகலமாய்நினைத்தலையுஞ் செய்யாநிற்கும் அவை களுக்குக் காரணமாகிய ஆணவமும் மாயையும்; அவ்விரண்டையும் நீத்தலே இரவும் பகலும் நீங்கிய வீடென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் என்று விவேகங்கூற, அதற்கு இவ்வாணவமும் மாயையும் துறத்தற்கு உபாயம் எங்ஙனம் என்று மனம் கேட்ப, அத்துறவு எய்தக் குறித்திடிற் பரபத்தி ஞானத்தினுற் கூடும். எ - து. அதற்கு அத்துறவினை நீ அடையக் கருதினையாயிற் பரபத்தி பரஞானத்தினுல் அத்துறவு கைகூடும், மற்றவை நெஞ்சே நிறத்த பத்தி நம் செயல் அறில் நாம் அறில் நின்ற மற்றென்று ஆமே. எ . து. நெஞ்சமே அந்தப் பரபத்தி பரஞானங்கள் யாவை எனின் சிவன் செயலை நாடி நமது செயல் அறும் ஆயின் அதுவே விளங்கா நின்ற பரபத்தி இப்பரபத்தியினுல் நமது செயலற்றுமென்று கருதும் போதம் அறும் ஆயின் மேற் சொல்லப்பட்ட பரஞானமாம் என்று விவேகங் கூறிற்று. எ - று.

தற்செயல் அறுதற்கு மேல் பத்தியில்லாமையாலும் தற்போதம் அறுதற்குமேல் ஞானம் இல்லாமையாலும் பரபத்தியென்றும் பரஞானம் என்றும் கூறப்பட்டன.

இதற்கு உதாரணம் : கந்தர் அலங்காரம்.

[1] அராப்புனை வேணியன் சேயருள்
வேண்டும் அவிழ்ந்த வன்பாற்
[2] குராப்புனை தண்டையந் தாடொழல்
வேண்டும் கொடிய [3]வைவர்
பராக்கரல் வேண்டும் மனமும்
பதைப்பறல் வேண்டு மென்றுல்
இராப்பக லற்றவி டத்தே
யிருக்கை யெளி தல்லவே. எ - ம்.

1. பாம்பு, 2. குராமலர், 3. ஐந்து இந்திரியங்களின் வெளி நோக்கு.

திருவாசகம்.

"பத்தி வலையிற் படுவோன் காண்க" எ - ம்.

திருவம்மானை.

"தற்போத மற்றிடந் தற்பரமம்மானை

மற்றும் வருவனவற்றுற் காண்க.

இப்பாட்டால் ஆணவமும் மாயையும் நீங்குதற்கு உபாயங் கூறியவாறு காண்க.

(31)

32. ஒன்று நஞ்செய லில்லைநெஞ்
சேயிவ ஞோர்மய லதனாலே
சென்று சென்று வெம்பவக் கடல்
மூழ்கினஞ் செறிமய லேதென்ன
நன்று நீவினாவினை யிருவினை
யையுநான் செய்தேன் எனுமான
மென்றறிந் திடீதொன் றையுமாற்
றினையெனி னுனக் கிணையாரே.

ஒன்றும் நஞ்செயல் இல்லை நெஞ்சே, எ - து. நெஞ்சமே உண்மையாகப் பார்க்குமிடத்துச் சிவன் செயலேயன்றி நமது செயல் ஒன்றாயினும் இன்றென்று விவேகங்கூற, அதற்கு நமக்குச் செயல் இன்று என்பதற்கு ஏது வென்னை என்று மனங்கேட்ப, நமக்கு ஆணவ மறைப்பாற் சுதந்தர அறிவு இன்மையாலும் கருவிகள் சடமாகையாலும் நம்மையும் கருவிகளையுங் கூட்டித் தற்சுதந்தர அறிவினையுடைய சிவன் தனது அருளால் இயக்க யாம் இயங்குதலின் எமக்குச் செயல் இன்று என்று விவேகங்கூற, அதற்கு இங்ஙனஞ் செயல் அற்று இருப்ப எழுவகைப் பிறவிகளும் எமக்கு வந்தது என்னை என்று மனங்கேட்ப,—இவண் ஓர் மயலதனாலே சென்று சென்று வெம்பவக் கடல் மூழ்கினம். எ - து. அதற்கு இவ்விடத்து ஒரு மயக்கத்தினாலே போய்ப் போய்க் கொடிய பிறவியாகிய துக்க சாகரத்தில் மூழ்கினேம் யாம் என்று விவேகங்கூற,—செறிமயல் ஏது என்ன. எ - து. அதற்கு ஒரு மயக்கத்தினாலே பிறவிச்சாகரத்



தில் மூழ்கினோமென்று கூறினீர். இங்ஙனம் பொருந்திய மயக்கமாவது யாதென்று மனங்கேட்ப நன்று நீ வினாவினை இரு வினையையும் நான் செய்தேன் எனும் மானம் என்றறிந்திடு எ - து. அதற்கு நீ நன்று வினாவினை; நன்று தீதாகிய இரு வினைகளையும் நான் செய்தேன் பிறர் செய்தார் என்று கருதும் உனது அபிமானமே அம்மயக்கம் என்று அறிந்திடுதியென்று விவேகங்கூற அதற்கு அந்த அபிமானந்தான் யாதென்று மனங்கேட்ப அதற்கு நீ பிறர்க்கு நன்று தீதுசெய்தவிடத்தும் பிறருனக்கு அவைகளைச் செய்த விடத்தும் நீ செய்த தீதினையும் பிறர் செய்த நன்கினையும் சிவன் செய்வித்தானென்று கூறி நீ செய்த நன்கினையும் பிறர் செய்த தீதினையும் நான் செய்தேன் பிறர் செய்தார் என்று அபிமானித்து விருப்பு வெறுப்பு அடைந்தனையாகலின் நீ செய்ததீதும் பிறர் செய்த நன்கும் முன்னர்ச் சிவன் செயலென்று கூறியதும் உனது அபிமானமேயாயிற்று. ஈதொன்றையும் மாற்றினையெனின் உனக்கு இணையாரே. எ - து. உனது [1] அபுத்தி பூர்வகமாய் வந்த தீதினையும் புத்தி பூர்வகமாய் வந்த நன்கினையும் பிறரால் உனக்கு வந்த நன்கு தீதினையுஞ் சிவன் செயலாய் நாடி நான் பிறர் என்று கருதுகிற அபிமானமாகிய இது ஒன்றையும் நீக்கினையானால் உனக்கு உவமை யாவரென்று விவேகங் கூறிற்று, எ - று. நான் செய்தேன் என்பதனாலே பிற செய்தார் என்பது வருவிக்கப்பட்டது.

இதற்கு உதாரணம்: குறுந்திரட்டு.

"தானலாதொன்று தன்னைத் தானெனக் கருதிக்கொண்டே
யானெலாஞ் செய்தேன் என்னுஞான மஞ்ஞான மத்தா
லீனமாம் வினையிரண்டாம் இருவினையா லுடம்பாம்
ஊனமா முடம்பால் ஊழாம் ஊழினாலாகா துண்டோ"

மற்றும் வருவனவற்றுற் காண்க. இப்பாட்டால் நாம் பிறர் என்று கருதும் அபிமானம் ஈதென்று அறிவித்தவாறு காண்க.

(32)

1. அபத்தி பூர்வகம் - தெரியாமல்.

அபுத்தி பூர்வகமாய்ச் செய்த தீதினையும் புத்திபூர்வகமாய்ச்செய்த நன்கினையும் பிறர்செய்த நன்கினையும் சிவன் செயலாகக் காண்கின்றேன் பிறர் செய்த தீதினை இங்ஙனங் காணக்கூடா தென்ற மனத்தைப் பார்த்து மேற்கூறுகின்றது.

33. இணையின் ஞானபூ ரணன்முழு துணர்ந்தமைத்
திட்டவா றலதிங்கே
யணைவு ருறதொரு தீதெமக் கவன்றரி
னார்தடுப் பவர்நெஞ்சே
பணைகொ டாவர மானமின் மையினுருப்
பற்றிநின் றிலகொல்லோ
வுணைவு ருதுடற் காவல்கை விடுதியூ
ழுள்ளவா விடாதென்றே.

இணையில் ஞானபூரணன் முழுதுணர்ந்து அமைந்திட்டவாறு அலது இங்கே அணைவுறுது ஒரு தீது எமக்கு. எ-து. சமானம் இன்மையினையும் இயற்கை ஞானத்தினையும் உடைய பரிபூரணனாகிய சிவன் நாம் செய்த வினைகள் எல்லாவற்றையும் ஒருங்கு உணர்ந்து அவ்வினைகளுள் இன்ன காலத்தில் இன்ன வினையை அனுபவிக்கப் பண்ணுவதென்று வகுத்துத்தந்தவாறு அல்லது இவ்விடத்துப் பிறரொருவரால் நமக்கு ஓர் தீது வந்து அடையாது என்று விவேகங்கூற அதற்கு சிருட்டி முதலிய செய்யும் பிரமன் முதலிய கடவுளரால்தான் எமக்கு ஒரு தீது உறாதோ என்று மனம் கேட்ப அச்சிவன் யாவர்க்கும் மிக்கான் ஆகலின் அவனையன்றி இவரால் ஒரு தீது செய்யக்கூடாது. அங்ஙனம் மிக்கான் ஆயினும் அவனறியாது இவரால் தீது செய்யக்கூடாதோ என்னின் இயற்கை ஞானத்தை உடையனாதலின் அச்சிவன் அறியாது இவரால் செய்யக்கூடாது, அவனறியாது இவராற் செய்யக்கூடாதாயினும் இவர் தீது செய்யும் இடத்து அவன் வந்து தடுப்பானோ என்னின் பரிபூரணன் ஆகலின் அவனைவிட இவர் இருத்தற்கும்செய்தற்கும் இடமே இல்லை ஆனால் அச்சிவனையே உபாசனை பண்ணித் தீதுறுது தடுத்துக் கொள்வேன் எனின் சிருட்டி தொடங்கி வீடு அடைவிக்கும்



அளவும் வினைகளையெல்லாம் ஒருங்குணர்ந்து அமைத்தது ஆகலின் அவனை உபாசித்தாலும் அதனைத் தடுக்கக்கூடாது. அவன் தரின் ஆர் தடுப்பவர் நெஞ்சே. எ-து. ஆகலின் இணையின் ஞானபூரணனாகிய சிவனே தீவினைக் கீடாக எமக்கு ஒரு தீது தருவான் எனின் அதனை யாவர் நீக்கிக்கொள்வார் நீ சொல்லுதி நெஞ்சமே என்றுவிவேகங்கூற அதற்கு நீர்கூறியது உண்மை; இங்ஙனம் அறிந்தாலும் தேகத்தோடு ஒற்றுமையாய் இருத்தலின் இதன்கண் அபிமானத்தை விடுத்தல் எங்ஙனம் என்று மனம்கேட்ப, பணைகொள் தாவரம் மானம் இன்மையின் உருப்பற்றி நின்றில கொல்லோ. எ - து. கோடுகள் தாங்கா நின்ற தாவர உயிர்கள் தமது உடம்புகள்மேல் அபிமானம் இன்றி இருக்கவும், பழவினைப்படியே அவ்வுடம்புகளோடும் கூடி நின்றிலவோ,—உள்நைவு உருது உடற்காவல் கைவிடுதி ஊழ் உள்ளவா விடாது என்றே. எ - து. அதுபோல நீயும் உள்ளம் மெலிவுறுது உள்ளபடியே பழவினை வருதல் அன்றி விடாதென்று அறிந்து உடம்பினைப் பாதுகாத்தல் கைவிடுவாய் என்று விவேகங் கூறிற்று. எ - து. இணையில் என்பதை யாவர்க்கும் மிக்கான் என்று கொள்க.

முழுதுணர்ந்தமைத்திட்டவாறு என்பதற்கு உதாரணம் சிவபோகசாரம்.

" அமைத்த வினைக்கீடா வனுதினமுஞ் செய்வ
திமைப்பொழுதும் வீண்செயலொன்றில்லை-யுமைக்குரியா
னெல்லா மறிந்தே யியற்றுவது தன்னடிமை
வல்லார் தமக்குணர்த்து வான் "

உடற்காவல் கைவிட்டிருப்பாய் என்பதற்கு உதாரணம் தேவாரம்.

தேனைக்காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தராய்
வானைக்காவல் கொண்டு நின்றார் அறியா நெறியானே

ஆனைக்காவில் அரனே பரனே அண்ணா மலையானே
ஊனைக்காவல் கைவிட்டுன்னை யுகப்பார் உணர்வாரே.

மற்றும் வருவனவற்றுற் காண்க. (33)

இன்னும் மனத்தினை உடன்படுத்தித் தேகாபிமானம் விடல் வேண்டுமென்று மேற்கூறுகின்றது.

34 என்றும் வீடடைந் தவரிறு
மாக்கயா னிறப்பைவிட் டகலாம
னின்று தான்றலை சாய்க்கவோ
நெஞ்சமே நினைத்துணை யாக்கொண்டு
நன்று நீயிதற் கென்செய்கேன்
சாவனோ நானெனல் இலையானுல்
ஒன்று செய்மலக் குடிலிதிலவாவை
நீக்கு உமாபதி தரும்வீடே

என்றும் வீடு அடைந்தவர் இறுமாக்க யான் இறப்பைவிட்டகலாமல் நின்றுதான் தலைசாய்க்கவோ நெஞ்சமே நினைத் துணையாக் கொண்டும் எ-து. வீட்டினை அடைந்தவர் எக்காலமும் இறுமாந்து கொண்டிருக்க யான் எக்காலமும் இந்த இறப்பினை விட்டு நீங்காதுநின்று தலைவளைக்கவோ, யாதோர் காரியம் நினைத்தாலும் அதனை எனக்குக் கைவசமாக்குகின்ற நெஞ்சமே நினைத்துணையாகப் பெற்றும் என்று விவேகங் கூற, அதற்கு நின்னைத் துணையாகக்கொண்டும் யான் தலைசாய்க்கவோ வென்று நியாய நிட்டூரங் கூறினீர். உமக்கு என்னாலாகுங் காரியம் யாதென்று உள்வெறுப்போடு மனங் கூற— நன்று நீ இதற்கு என் செய்கேன்சாவனோ நான் எனல். எ-து. நல்லது நீர் இங்ஙனம் சொல்லும் இதற்கு என்னை செய்கேன் யான்தான் சாவனோ என்று நீ சொல்லற்க.—இலையானுல் ஒன்று செய். எ - து. உடம்பின்மேல் அபிமானம் ஒருங்கே கைவிடுதல் கூடாதாயினும் ஒரு காரியம்செய்குதி நீயென்று விவேகங் கூற அதற்கு அக்காரியம் யாதென்று



மனங்கேட்ப, மலக்குடில் இதில் அவாவை நீக்கு உமாபதி தரும் வீடே. எ-து. அதற்கு மலம் நிறைந்த குடிசையாகிய இவ்வுடம்பின்கண் வைத்த ஆசையை விட்டு நீங்குதி இது செய்தியேல் உமைக்குப் பதியாகிய சிவன் எமக்கு வீட்டினைத் தானே தருவான் என்று விவேகங் கூறிற்று எ - று.

வீடு ஊர்த்துவமுகமும் பிறப்பு அதோ முகமும் ஆகலின் இறுமாக்கவென்றும் தலைசாய்க்கவென்றும் கூறப்பட்டன. உடம்பின்மேல் அவா நீங்கின் அறிவு திருவடியை நாடும் அங்ஙனம் நாடும்போது சிவன் வீடு கொடுத்தல் சித்தமாகலின உமாபதி தரும் வீடு என்று கூறப்பட்டது.

வீடடைந்தவரிறுமாக்க என்பதற்கு உதாரணம், திருநாவுக்கரையர்.

1. " இறு மாந்திருப்பன் கொலோ
ஈசன் பல் கணத்தெண்ணப் பட்டுச்
சிறுமான் ஏந்தி தன் சேவடிக் கீழ்ச்
சென்றங் கிறுமாந்திருப்பன் கொலோ''.

குடில் இதிலவாவை நீக்கு என்பதற்கு உதாரணம் :- திருவள்ளுவநாயனுர்.

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்ருர்க்கு உடம்பு மிகை.

மற்றும் வருவனவற்றுற் காண்க. (34)

தேக போகங்களில் அவாவின் றியிருத்தற்கு உபாயம் மேற் கூறுகின்றது.

35. வீடு கூட்டுவான் குறித்ததி
னிமித்தமா விமலனீதலி னம்பாற்
கூடுமாயையை யெனதி யானென
வெணிக் கொள்வதென் பயமாசை
நாடுபோழ் திவைசு ழுத்தியிற்
புரந்தவ னெவனவன னவாதி
யூடு மூழ்வழி புரப்பனென்
றுள்ளமே யுடல்கை விட்டிருப்பாயே.

---

1. சகல துன்பங்களும் அற்று மகிழ்ந்திருத்தல்.

வீடு கூட்டுவான் குறித்து அதின் நிமித்தமா விமலன் ஈதலின் நம்பாற் கூடுமாயையை. எ-து. ஆணவத்தான் மறை பட்டிருந்த எம்மை எமக்கு இவ்விருளை நீக்கி வீட்டின்பத்தைத் தரல் வேண்டும் என்று யாம் கேளாதிருக்கவும் தனது காருண் யத்தால் எடுத்து வீட்டினை அடைவித்தற்பொருட்டுத் திரு வுளத்தடைத்து அவ்வீடு அடைதற்கு ஏதுவாகிய நிருமலனாகிய சிவன் மாயையில் தனு கரணபுவன போகங்களைக் கொடுத் தலின் அதனால் நம்மிடத்து வந்து பொருந்தும் மாயா காரியங் களை எனது யான் என எணிக் கொள்வது என்பயம் ஆசை. எ-து. தனுகரணங்களை யான் எனவும் புவனபோகங்களை எனது எனவும் கருதிக்கொண்டு இத்தேக போகங்கள் நீங்கு மென்று பயமும் இவை இருக்க வேண்டுமென்று ஆசையும் நீ உட்கொள்வது என்னை,-நாடுபோழ்து இவை சுழுத்தியிற் புரந் தவன் எவன் அவன் நனவாதியூடும் ஊழ்வழி புரப்பன் என்று உள்ளமே உடல் கைவிட்டு இருப்பாயே. எ-து. உண்மையாக விசாரிக்குங் காலையில் இத்தேகபோகங்களை நீ அபிமானியா திருக்கவும் சுழுத்திக்கண் இவற்றைப் பாதுகாத்த இறைவன் எவன் அவ்விறைவனே யான் எனது என்று உன்னால் அபிமா னிக்கப்பட்ட நனவு கனவுகளுள்ளும் ஊழ்வினைப்படியே பாது காப்பான் என்று அறிந்து நெஞ்சமே உடலைப் பாதுகாத்தல் கைவிட்டு இருத்தி என்று விவேகங் கூறிற்று, எ-று.

மாயை என்பது [1]காரணவாகுபெயர். மனம் அபிமானி யாத சுழுத்தியில் இறைவன் காத்தல் இயல்பாதலினாலும் தனு வாதிகளை மாயையிற் காரியப்படுத்தித் தந்ததனாலும் இவை நான்கும் இவ்விறைவனது உடைமை என்று அறிக.

இதற்கு உதாரணம்; திருநாவுக்கரையர்.

நன் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்

1. தனுகரண புவனபோகங்களாகிய காரியங்களை இவை கட்குக் காரணமாகிய மாயை யென்றது



தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே

மற்றும் வருவனவற்றுள் காண்க. (35)

தேக போகங்களை இறைவன் காத்தல் இயல்பாதலின் யான் அவற்றை அபிமானியாது இருக்கின்றேன் என்று கூறிய மனத்தைப் பார்த்து நீ இங்ஙனம் சொல்வதன்றிச் சொன்னபடி நில்லாய் என்று மேற்கூறுகின்றது.

36. இருப்பை நாடொறு நெஞ்சமே
சுகாசுக மெதுவரு மதுவேயாய்ப்
பொருப்பு வில்லிதாள் விருப்பமெவ்
வினையினைப் புசிக்குஞான் றடைவாயோ
கருப்பை யுற்றுதித் தறற்குமி
ழியினழி காயமீதுள போழ்தே
குருப்பி ரான்றிருக் கழற்குமெய்
யன்புநீ கொள்ளறெள் ளிமையாமே.

இருப்பை நாடொறும் நெஞ்சமே சுகாசுகம் எதுவரும் அதுவே யாய் பொருப்பு வில்லிதாள் விருப்பம் எவ்வினையினைப் புசிக்கும் ஞான்று அடைவாயோ. எ-து. எக்காலமும் நெஞ்சமே நீ சுக துக்கங்களுள் எதுவொன்று வந்தடுக்குமோ அதுதானே வடிவாகி இருக்கின்றாய். இத்தேகம் இருக்குமளவும் அவ்விரு வினைகளும் வாராத நாள் இன்றாகலின் இவ்வினைகளை அருந்து நாள் இன்றி இனி எந்த வினையை அருந்து நாளிற் குன்றவில்லி யாகிய சிவனது திருவடிக்கண் விருப்பத்தை அடைவாயோ;- கருப்பை யுற்று உதித்து அறல் குமிழியின் அழிகாயம் ஈது உள போழ்தே குருப்பிரான் திருக்கழற்கு மெய்யன்பு நீ கொள்ளல் தெள்ளிமையாமே. எ-து. மாதாவினது கருப்பாசயத்தின் கண் வினைக்கீடாய் வந்து பொருந்தி அதன்கண் பத்துத் திங்கள் இருந்து பூமிக்கண்ணே தோன்றி நீர்க்குமிழிபோன்று விரைவில் அழியும் இந்தக் காயம் இருக்கும்போதுதானே மிக விரைந்து மது ஆசாரியனாகிய கருத்தனது திருவடிக்கு மெய்ப்பத்தி

மனதுட் கொள்ளுதல் மயக்கமறத் தெளிந்த தன்மையாமென்று விவேகங் கூறிற்று. எ - று.

சமுத்திர ஸ்நாநம் பண்ணத் தொடங்கினேன் அலைகளை நாடாது மூழ்கித் தனது விரதம் முடித்தல் போலத் திருவடியை அடையத் தொடங்கினேன் இவ்வினைகளை நாடாது அத்திருவடியை அடைதலையே விரதமாகக் கொள்ளல் வேண்டுமென்றற்கு எவ்வினையைப் புசிக்கும் ஞான்று அடைவாயோ என்றும் குருபத்தியுடையோர்க்கு வீடு எளிதிற் கூடுமாகலின் மெய்யன்பும் கொள்ளல் தெள்ளிமை யென்றும் கூறப்பட்டன.

இதற்கு உதாரணம்: பொன்வண்ணத்தந்தாதி

தொடங்கிய வாழ்க்கையை வாளா துறப்பர் துறந்தவரே
அடங்கிய வேட்கை யரன்பா லிலரறு காற்பறவை
முடங்கிய செஞ்சடைமுக் கணனுர்க்கன்றி யிங்குமன்றிக்
கிடங்கினுட்பட்ட [1]கராவனையார் பல [2]கேவலரே.

மற்றும் வருவனவற்றுல் காண்க (36)

37. ஆமை யாருறுப் பைந்தையு
மோர் மெயுளடக்கலிற் புலனைந்தும்
தீமை சேர்விடயங்களில் செலா
தமைத் துள்ளமே சிவைபாக
சோம சேகரன் சரணமே
சரணெனத் தொழுதுநின் றழுதன்னேன்
நாமம் நாவினுற் செபித்திலை
யவத்திலே நாளெலாங் கழித்தாயே

ஆமை ஆர் உறுப்பு ஐந்தையும் ஓர் மெய்யுள் அடக்கலின் புலன் ஐந்தும் தீமை சேர் விடயங்களில் செல்லாது அமைத்து. எ - து. ஆமையானது தனது அரிய ஐந்து அங்கத்தினையும் தீமை வருமிடத்துத் தனதுஒருடம்பின்கண் அடக்கிக்கொள்ளுதல் போலப் பஞ்சேந்திரியங்களையும் பாவங்களுக்கு ஏதுவாய் வருகின்ற விஷயங்களில் போக வொட்டாது விவேகத்தால்

1 முதலை 2 மயங்கிய கீழ்மக்கள்.



உள்ளடக்கி,—உள்ளமே சிவைபாக சோம சேகரன் சரணமே சரண் எனத் தொழுது நின்று அழுது அன்னேன் நாமம் நாவினுற் செபித்திலை அவத்திலே நாளெலாங் கழித்தாயே. எ - து. நெஞ்சமே கௌரியைப் பாகத்திலே வைத்த சந்திர சூடனுகிய சிவனது திருவடிகளே அடைக்கலம் என வணங்கி நின்று திருவடிகளை அன்பால் நினைந்து உருகி அழுது அவனது திருநாமமாகிய ஐந்து எழுத்தினையும் நாவினுல் இடைவிடாது செபித்தாயில்லை; மித்தையாகிய தேக போகங்களைக் கருதி அவத் தொழிலாலே வாழ்நாளெல்லாம் வீணுளாகக் கழித்தனை. இது என்னை என்று விவேகம் கூறிற்று. எ - று.

அவம் என்பது தொழிலின்மேல் நின்றது.

ஆமையாருறுப்பைந்தையு மென்பதற்கு உதாரணம்: திருவருட்பயன்.

" புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவார் போதார்
தலனடக்கு மாமை தக "

நாவினுற் செபித்திலை என்பதற்கு உதாரணம் அருணகிரியந்தாதி.

பரகதிக்கு வித்தாமுன் பஞ்சாக் கரத்தைப்
பரபரப்ப வெண்ணுத பாவம்—நரகப்
பிறப்பிற்கு மீடாப் பிறந்தருணை யீசா
இறப்பிற்கும் ஈடாயினேன்,

மற்றும் வருவனவற்றுல் காண்க. (37)

38. தாயு மாகியென் றந்தையாய் வந்துதா
டருசிவப் பிரகாசன்
தூய பொன்னருள்வேண்டிலை யீண்டு நின்
துணிவிருந்தமை யென்னே
காய மாயமென் றறிந்துமா தர்கடரு
கலவிவேண்டினை யென்றல்
தீயை நீமிக நெஞ்சமே யிதற்கியான்
செய்வதொன்றறி யேனே.

தாயுமாகி என் தந்தையாய் வந்து தாள்தரு சிவப்பிர காசன் தூய பொன்னருள் வேண்டிலை ஈண்டு நின் துணிவு இருந்தமை என்னே. எ - து. மாதாவுமாகிப் பிதாவுமாகி எழுந்தருளி வந்து திருவடிகளை எளிதிலே தந்த சிவப்பிரகாசன் என்னும் நாம தேயத்தையுடைய ஆசாரியனது நிர்மலமாகிய பொன்போன்ற கிருபையை விரும்புகின்றிலை. இவ்விடத்து நின் கருத்து இருந்த தன்மை என்கொலோ யான் அறிகிலேன். காயம் மாயம் என்று அறிந்து மாதர்கள் தரு கலவி வேண்டினையென்றால் தீயை நீ மிக நெஞ்சமே இதற்கு யான் செய்வதொன் றறியேனே. எ - து. தேகம் அநித்யமென் றறிந்தும் மாதர்களால் உண்டாகிய கூட்டுறவினை விரும்பினை என்றால் நெஞ்சமே நீ மிகவும் பாவியாயினை. யான் என்ன கூறினுங் கேட்டிலையாகலின் இதற்கு யான் செய்வது ஒருபாய மும் அறியேன் என்று விவேகங் கூறிற்று. எ - று, தாடருதல் திருவடி தீட்சை.

தாயுமாகி யென்பதற்கு உதாரணம்: தத்துவராயர்.

தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானும்
அந்தமிலா இன்பம் நமக்காவானும்—எந்தமுயிர்
தானாகுவானும் சரணாகு வானும்அருட்
கோனாகு வானும் குரு.

செய்வதொன் றறியேனே யென்பதற்குதாரணம்: திருவாசகம்.

ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கன்பிலை யென்புருகிப்
பாடுகின்றிலை பதைப்பதுஞ்செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோறலறிலை செய்வதொன்றறியேனே.

மற்றும் வருவனவற்றுற் காண்க.

(38)

39. ஏனை நூல்பல வோதினை யோதவற்
றிறையரு ளடையாதார்க்
கூன வெம்பவ மொழிப்பதற் குள்ளமே
வுபாயம்வே றிலையானால்



ஆனையீருரி போர்த்தவென் றம்பிரா
னருள்விரைந் தடையாதே
தானி நாண்மினூர் போகநீ வியந்தது
தப்பலாற் சதுரன்றே

ஏனை நூல்பல ஓதினை. எ-து. ஞானசாத்திரங்கள் அன்றிப் பல சமய சாத்திரங்களையும் கற்றுணர்ந்தாய்,--ஓது அவற்று இறையருள் அடையாதார்க்கு ஊனவெம்பவம் ஒழிப்பதற்கு உள்ளமே உபாயம் வேறு இலைஆனால் எ - து. நீ கற்றறிந்த அந் நூல்களின் கருத்தெல்லாம் இறைவனது திருவருளைப் பெறுதார்க்கு இழிவு பொருந்திய கொடிய பிறவியை நீக்கு தற்கு உபாயம் வேறு ஒன்றும் இல்லையென நெஞ்சமே ஓது மானால்—ஆனையீருரிபோர்த்த என் தம்பிரான் அருள்விரைந்து அடையாதே இநாள் மினூர் போகம் நீ வியந்தது தப்பலால் சதுர் அன்றே. எ - து. யானையினது குளிர்ச்சி பொருந்திய உரியைப் போர்த்த எனது கருத்தனாகிய சிவனது திருவருளைச் சீக்கிரத்தில் அடைதற்கு ஏதுவாயவற்றைச் செய்து அடை யாது, இந்நெடுங்காலமும் மின்போலும் இடையினையுடையார் போகத்தை நீ இன்பம் என்று அதிசயித்தது, தவறேயன்றி நன்மையன்று என்று விவேகங் கூறிற்று. எ - று. இலை என்ப தனோடு ஓது என்பதனைக் கூட்டி முடிக்க. எனவென்பது எஞ்சி நின்றது. தான் என்பது அசைநிலை.

இதற்கு உதாரணம்: கந்தரனுபூதி.

ஆதாரமிலே னருளைப் பெறவே
நீதானொரு சற்றும் நினைந்திலையே
வேதாகம ஞானவினோத மனோ
தீதாசுரலோக சிகாமணியே.

என்றும் திருவள்ளுவ நாயனார்

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்.

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க. (39)

40. சதுர்மறைப் பொருளாகிய வொருசிவ
சங்கரற் ரெழு தன்பாய்
விதிர்விதித்து மெய்பொடித்திலை நடித்திலை
விரைந்து சென்ற வனுடும்
பொதுவையுற்றிலை நிற்றிலை மாதர்பாற்
போகுதல் தவிர்ந் தாவா
வெதுபடக் கடவாய் மடநெஞ்சமே
யினியுட லகன்ருலே

சதுர்மறைப் பொருள் ஆகிய ஒரு சிவசங்கரன் தொழுது அன்பாய் விதிர் விதிர்த்து மெய் பொடித்திலை, நடித்திலை விரைந்து சென்று அவன் ஆடும் பொதுவையுற்றிலை. எ - து. இருக்கு முதலிய நான்கு வேதங்களினது முடிக்கண் இருக்கும் மெய்ப்பொருளாகிய சிவசங்கரனது திருவடியை வணங்கி அதற்கு அன்பாகித் தேகம் நடு நடுங்கிலை; உரோமம் சிலிர்ப்பு உற்றிலை; ஆனந்த நடனம் புரிந்தாயில்லை; அதிசீக்கிரமாய்ச் சென்று அவன் நடனம் புரியா நின்ற கனக சபையை அடைந் தாயில்லை;—நிற்றிலை மாதர்பால் போகுதல் தவிர்ந்து ஆஆ எதுபடக் கடவாய்மட நெஞ்சமே இனி உடல் அகன்ருலே. எ - து. மகளிரை விழைந்து அவர்பாற் செல்லுதலைத் தவிர்ந்து நின்ருய் இல்லை. ஆ, ஆ,! நெஞ்சமே இனி இந்தத்தேகம் நீங் கினுல் என்ன பாடுபடக் கடவையோ? யான் அறிகிலேன் என்று விவேகங் கூறிற்று. எ - று. ஆவா வென்பது இரக்கக் குறிப்பின்கண் வந்தது.

பொதுவையுற்றிலை யென்பது எல்லா வுயிர்க்கும் பொது வாய் நடிக்கும் அவனது பஞ்சகிருத்தியங்களைப் பார்த்திலை யென்றுமாம்,

இதற்கு உதாரணம் திருவாசகம்.

மெய்தானரும்பி விதிர்விதிர்த்துன் விரையார் கழற்கென்
கைதான்றலை வைத்துக் கண்ணீர் ததும்பிவெதும்பியுள்ளம்
பொய்தான்றவிர்ந் துன்னைப் போற்றிசயசய போற்றி யென்னும்
கைதான்நெகிழவிடேன் உடையாய் என்னைக்கண்டு கொள்ளே

மற்றும் வருவனவற்ருற் காண்க.

(40)



41. ஆல நீழலி லன்ரெரு நால்வருக்
கருநெறி யுரைத்தானைக்
கால காலனைச் சிவப்பிரகாச வென்
கண்மனிதனை யுன்ன
தேலவார் குழலார் மயல்
கொண்டுநீ யிங்குழலுவ தெல்லாஞ்
சாலவே பிழை யாகுநெஞ்சே சொானேன்
றவறிலையென் மேலே

ஆல நீழலில் அன்று ஒரு நால்வருக்கு அருநெறி உரைத் தானை; எ - து, கல்லால நிழற்கண் எழுந்தருளியிருந்த காலத் தில் ஒப்பற்ற சனகர் முதலிய நான்கு முனிவர்க்கும் யாவ ருக்கும் அரிய ஞானமார்க்கத்தினை உபதேசித்தருளிய அநுக் கிரககர்த்தனை,–காலகாலனை எ - து. எல்லாவுயிர்களையும் நாசம் பண்ணுகின்ற காலனுக்குக் காலனுகி, அவனை நாசம் பண்ணிய நிக்ரக கர்த்தனை--சிவப்பிரகாச என் கண்மணிதனை உன்ன்துது. எ - து. அக் கருத்தன்ருனே அருளே திருமேனியாகக் கொண்டு எழுந்தருளி வந்து, சிவப்பிரகாசன் என்னும் நாமதேயத்தைக் கொண்ட என் கண்ணின்கண் மணியாடு பாவைபோன்ற ஆசாரியனை, வீட்டின்பத்தை அடையும் பொருட்டு இடை யருது அன்போடுங் கூடி நினையாது,—ஏலவார் குழலார் மயல் கொண்டு நீ இங்கு உழலுவது எல்லாம் சாலவே பிழையாகும் நெஞ்சே சொனேன் தவறிலை என்மேலே. எ - து. [1]தகர மூட்டிய நீண்ட அளக பாரத்தினையுடைய மகளிர் மேல் மயக் கம் பூண்டு, நீ இப்பிரபஞ்சத்திற் சுழலுவது எல்லாம் மிகவும் குற்றமாகும் நெஞ்சமே யான் நானு உபாயங்களாலும்இதனைத் துன்பமென்று அறிவித்தும் அறிந்தாயில்லை ஆதலின் உன்மேற் குற்றமே அன்றி என்மேற் குற்றம் இன்றென்று விவேகங் கூறிற்று. எ - து.

கண்மணி தீது இது நன்று இது என்று அறிவித்தல் போலப் பிறப்புத் துன்பமென்றும் வீடு இன்பம் என்றும் அறிவித்தலிற் கண்மணி என்று கூறப்பட்டது.

---

1. மயிர்ச்சாந்து; வாசனைத் திரவியப் புகை.

இதற்கு உதாரணம் திருவாசகம்.

வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றாய் ஆழாமற் காப்பானை யேத்தாதே
சூழ்கின்றாய் கேடுஉனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீஅவலக் கடலாய வெள்ளத்தே.

என்றும் சிவானந்தமாலை.

வீடொழியப் பேறில்லை யென்றென்றும் வேதங்கள்
நாடியறை யும்பொருளை ஞானகுரு - நீடுமருட்
கண்ணாலே சொன்ன கருணைப் பிரான்றனை நான்
எண்ணாதே யுண்டிருப்ப தென்.

என்றும் மற்றும் வருவனற்றாற் காண்க. (41)

42 என்னை கண்டுநீ மாதரார் வடிவமீ
திச்சைவைத் துழல்கின்றாய்
பொன்னை யுந்துகி லையும்பிரித் திடில்வெறும்
புழுமலக் கூடல்லால்
பின்னை யுண்டுகொல் கண்டுநீ மயங்குதல்
பிராந்திசங் கரன்பாதம்
தன்னை நாடுதி நெஞ்சமே பரசுகோ
ததியுறப் பெறலாமே.

என்னை கண்டு நீ மாதரார் வடிவமீது இச்சை வைத்து உழல்கின்றாய். எ - து. யாது சுத்த மிருக்கிறதென்று குறித்து மகளிர் உடலின்கண் ஆசைவைத்து மயங்கிச்சுழலா நின்றனை பொன்னையும் துகிலையும் பிரித்திடின் வெறும் புழுமலக் கூடல்லால் பின்னை யுண்டுகொல்? கண்டு நீ மயங்குதல் பிராந்தி, எ - து. செயற்கையால் மினுக்கிய பொன்னாலாகிய அணியினையும் [1]கூறையினையும் வேறு பிரித்து அதனது இயற்கையைப் பார்க்கும் இடத்து வெறுங்கிருமிகளும் மலம் சலம் குடர் மூளை உதிரம் தசை கோழை முதலிய மலங்களும் நிறைந்துள்ள ஓர் உடம்பல்லது பின்னை அதன் கண்ணே யாதாயினும் ஒரு சுத்த வஸ்து உளதோ. அதனது இயற்கை வடிவம் அங்ஙனம் இருப்பச் செயற்கை வடிவத்தைப் பார்த்து நீ மயக்க முறுதல்

1. கூறை—சீலை.



உனது மனப்பிரமையாகும், — சங்கரன் பாதந்தன்னை நாடுதி நெஞ்சமே பரசுக உததி உறப்பெறலாமே. எ - து. இனி அதன்மேல் ஆசையை விட்டு நீங்கிச் சங்கரனது திருவடியை மறவாது நினைப்பாய் நெஞ்சமே மேலாகிய இன்ப சாகரத்தை மிகவும் யாம் அடையலாமென்று விவேகம் கூறிற்று. என்றவாறு.

பொன் என்பது[1] ஆகுபெயர்.

இதற்கு உதாரணம் : நாலடியார் :

“ குடருங் கொழுவுங் குருதியு மென்புந்
தொடரும் நரம்பொடு தோலும்—இடையிடையே
வைத்த [2] தடியும் வழும்புமா மற்றிவற்றுள்
எத்திறத் தாளீர்ங் கோதை யாள் ”

மற்றும் வருவனவற்றாற் காண்க. 42

43 பெறுவது என்னைகொல் சுக்கிலங் கலித்தலால்
பெருந்தவ வலிகுன்றும்
உறுவது அவ்வளவோ பினைநீ விரும்(பு)
உடற்குமானி யதுண்டால்
அறிவியா மறியாமை தோயந் துடற்றின
வதைச்சுக மெனாநின்றாய்
செறிது நெஞ்சமே நமது சிற்சுகமினிச்
சிவனை யாதரிப்பாயே.

பெறுவது என்னைகொல் சுக்கிலம் கலித்தலால் பெருந்தவ வலிகுன்றும், எ - து. மகளிர் கூட்டுறவாற் பயன் அடைவது யாது, இந்திரியம் கழிந்து போதலால் வீட்டையடையும் பொருட்டு நீ நெடுநாள் வருந்திச் செய்த தபோபலமெல்லாம் குறையும்,—உறுவது அவ்வளவோ பிணைநீ விரும்பு உடற்கும்

1. பொன்னாலாகிய ஆபரணத்தைப் பொன் என்பது.
2. தடியும்...யாள் -மாமிசமும் நிணமுமாகிய இவைகட்குள்ளே எப்பக்கத்தாள் குளிர்ந்த பூமாலையையுடைய பெண்.

ஆனியது உண்டு, எ - து. அதனுல் உனக்குக் கேடுவருவது அவ்வளவுதானே பின்னர் நீயான் என்று விழைந்துள்ள உடம்பிற்கும் அடங்கியிருந்த நோய்கள் மேலிட்டு அதனுல் நாசமுளதாம்என்று விவேகங்கூறஅதற்குயாம்தாம்யாவர்? எமது சுகம் ஆவது யாது? என்று மனம் கேட்ப,—அறிவு யாம் அறியாமை தோய்ந்து உடல்தினவு அதைச் சுகம் எனு நின்ருய். எ - து இவ்வுடம்பு சடமாகலின் இதன்கண் நின்ற சைதன்னியம் யாம் நீ இதனை யறியாது அஞ்ஞானத்தோடுங் கூடி உடம்பினது தினவைச் சுகம் என்று கருதா நின்றனை இவை சுகமல்லவென்று விவேகம் கூற மேற்சுகமாவது தான் யாதென்று மனம் கேட்ப, செறிதும் நெஞ்சமே நமது சிற்சுகம் இனிச்சிவனை ஆதரிப்பாயே. எ - து. இவ்வின்பத்தின் இயற்கை ஈதென்று அறிந்து விடுத்து நமது அறிவிற்கு அறிவாய் நின்ற சிவனது திருவடியை ஆதரிப்பாய் நெஞ்சமே நமது ஞானனந்தத்தைப் பெறுவாமென்று விவேகங் கூறிற்று. எ - து.

இதற்கு உதாரணம், திருக்கடைக் காப்பு.

அருப்புப்போன் முலையார் அல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் விட்ட மாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச் செயக்
கருப்புச் சாற்றினு மண்ணிக்குங் காண்மினே

மற்றும் வருவனவற்ருற் காண்க (43)

தாயுமாகி யென்னும் பாட்டு முதல் இவ்வாறு பாட்டாலும் பொருந்தலே விழைதலாகாது என்று மறுத்தவாறு காண்க.

ஆதரித்தனை குளகிருதா தாதிய வடிசிலைக் கூழ்காடி
யேது பெற்றிடினும் புசித்தாற்பசி யேகலும் சமித்தற்ருற்
பேத மற்றெலா மலமதா தலுஞ்சரி யென்றிடின் பினை நெஞ்சே
நீத ரித்திலா தவைவிழைந்துழல்வதென் னிமலனை நினையாதே

ஆதரித்தனை குளகிருதாதிய அடிசிலை. எ - து. [1]கிருதகுள பாயச முதலிய அறுசுவை யடிசில்களையும் நீ விரும்பினை, இத

1. கிருதகுள பாயசம் - நெய் சருக்கரை சேர்ந்த பாயசம்.



னுல் என்ன பயனையடைதி,—கூழ் காடி ஏது பெற்றிடினும் புசித்தால் பசியேகலும் சமித்து அற்ருல் பேதம் அற்று எலாம் மலமாதலும் சரி என்றிடின். எ - து. சோறு, காடி, புற்கை முதலிய யாது வந்ததாயினும் அருந்தினுற் பசிபோதலும் அவை சீரணித்தடங்கினுல் நானு வேறு பாடெல்லாம் அற்றுத் துர்க்கந்த மலமாதலுஞ் சரியென்ருல்,--பினை நெஞ்சே நீ தரித்திலாது அவை விழைந்துழல்வது என் நிமலனை நினையாதே. எ - து- இங்ஙனம் அறிந்து பின்னரும் நெஞ்சமே நீ தரித்து நில்லாது அச்சுவையடிசில்களை விரும்பிச் சுழல்வது என்னை, நிர்மலனுகிய சிவனை இடைவிடாது கருதல் இன்றி என்று விவேகங் கூறிற்று. எ - று.

மலமதாதலும் என்பதில் அது என்பது பகுதிப்பொருள் விகுதி. சரி என்பது விசேடமின் றென்பது அறிவித்தது.

இதற்கு உதாரணம்: சிவானந்தமாலை, பாடுதுறை

நல்ல அறுசுவைதான் நாக்கினுனி மாத்திரமே
எல்லையிரு விரலே யல்லதில்லை—மெல்ல
இருவிரலைத் தான்கடக்க மாட்டாதே நெஞ்சே
பொருகடலைத் தான்கடப்பாய் போய்.

மற்றும் வருவனவற்ருற் காண்க. இதனுள் அருந்தலுட் சுவை விழைதலாகாதென்று மறுத்தவாறு காண்க. (44)

45. நினைப்பினுங் குறிகாட்டிடுங் கோசநா
விவற்றுனே ரிழையாரை
யினிப்பை நல்குமுக் கனிமுத லியஉண
வினையெனினி வைபோலும்
உனைப்பல் வாதைசெய் பகைபிறிதில யுணர்ந்
துள்ளமே யொழித்தாயேற்
பினைப் பராபரன் திருவடி நீழல்யாம்
பெறற்கிடை யூறுஇன்றே,

நினைப்பினும் குறிகாட்டிடும் கோசம்நா இவற்றுள் நேரிழையாரை இனிப்பை நல்கும் முக்கனி முதலிய உணவினை எனின், எ - து. விஷயங்களாகிய எல்லாவற்றுள்ளும் மகளிரையும் சுவையினைத்தருகின்ற முப்பழம் முதலிய புசிப்பினையும் மனத்தால் நினைப்பினும் ஆண் குறியும் நாவும் இலேபனமும் நீருரலும் ஆகிய அடையாளங்களைக் காட்டுமானால்,—இவைபோலும் உனைப் பல் வாதைசெய் பகைபிறிது இலை உணர்ந்து உள்ளமே ஒழித்தாயேல். எ - து. இவற்றைப்போலும் உனக்குப் பல பிறவித்துன்பங்களைத் தருகின்ற சத்ரு வேறொன்று இல்லை ஆகலின் இப்பொருந்தல் அருந்தல்களைச் சத்ருவென்று அறிந்து விடுத்தனையானால்,—பினைப் பராபரன் திருவடி நீழல் யாம் பெறற்கு இடையூறு இன்றே எ - து. பின்னர் யாவருக்கும் மேலாகிய பரமசிவனது திருவடியாகிய நீழலை யாம் அடைதற்கு விக்கினம் வேறு இன்றென்று விவேகம் கூறிற்று. எ - று.

நினைப்பினும் எனவே கேட்பினும் பரிசிப்பினும் பார்க்கினும் என்று இந்திரியங்களுக்குங் கொள்க. அருந்தல் பொருந்தல்களில் மன முதலிய ஆறு இந்திரியங்களும் பிரவிருத்தியாகலின் திருவடியை அடைதற்கு இவை நிவர்த்தி ஆகல் வேண்டுமாகலின் பகை பிறிதிலையென்று கூறப்பட்டது.

இதற்கு உதாரணம்: சிவானந்தமாலை.

ஊனு முறையுநமன் றூதுவர் காணுள்ளமே
வானுதலார் நேரே மறலிகாண்—பேணியிவ
ருற்றூர்போல் வந்திடுவர் வந்தாலு மோட்டியரன்
நற்றாமரைப் பதமே நாடு. (45)

மற்றும் வருவனவற்றுற் காண்க.

46. இன்று சூழ்தரு வனிதைய ராதிபல்
போகமும் இத்தேகத்
தொன்று நோயினிற் றோடமாய் நீங்குமாங்
குயிர்பெய ரினுநீற்றை



நன்றெ னுவணிந் துறவின
ரிறைபெயர் நவிலுவ ரெனின்நெஞ்சே
பொன்று நாள்துணை யாகநீ றுதிய
போற்றவை போற்றேலே.

இன்று சூழ்தருவனிதையர் ஆதிபல் போகமும் இத்தேகத்து ஒன்று நோய் எனில் தோடமாய் நீங்கும். எ - து. இந்தக் காயத்திற்கு ஒரு வியாதி வந்து பொருந்துமாயின் இதனால் அனுபவித்தற்குக் கருத்தில் வைத்த மனைவியாதிய பல போகங்களும் இக்காலத்துத் தானே புசித்தற்கு அன்னியமாய்ப் போகும் ஆகலின்,—ஆங்கு உயிர்பெயரினும் நீற்றை நன்றென அணிந்து உறவினர் இறைபெயர் நவிலுவர் எனின், எ - து. இவ்வுடம்பினை விட்டு உயிர் நீங்கிய காலத்தும், சுற்றத்தாராய் உள்ளார் திருவெண்ணீற்றை அவ்வுயிர்க்கு நன்றென்று கருதித் தரித்து நீங்குந் தருணத்திற் சிவனது திருநாமமாகிய பஞ்சாட்சரத்தையும் உபதேசிப்பார்களானால்—நெஞ்சே பொன்று நாள் துணையாக நீறு ஆதிய போற்றுஅவை போற்றேலே, எ - து. இனி நெஞ்சமே உயிர் நீங்குங்காலத்துத் துணையாகலின் அத் திருவெண்ணீறு முதலிய எண்வகையினையும் அது நீங்கா முன்னரே பேணிக் கொள்ளுதி மனைவி முதலிய எண்வகைப் பொருள்களும் இருக்கும்போதும் புசித்தற்கு அன்னியமாகலின் நீ அவைகளைப் பேணுதொழிதி என்று விவேகம் கூறிற்று. எ - று.

உயிர் பெயரினும் என்ற இழிவு சிறப்பும்மையால் அது பெயரா முன்னரே அணிவது உயிர்க்கு மிகவும் பயன் என்பது ஆயிற்று. வனிதையராதியெனவே வனிதை. பஞ்சணை சௌக்கிய போசனம் கந்தம் ஆடை ஆபரணம் தைலம் தாம்பூலம் ஆக எண்வகையுமென அறிந்து கொள்க. நீறுதியெனவே விபூதி உருத்ராக்கம் பஞ்சாட்சரம் தீர்த்தம் பிரசாதம் குரு இலிங்கம் சங்கமம் என அறிக.

இதற்கு உதாரணம்: [1]சித்தாந்த சிகாமணியுட் காண்க.

தவத்தோர்க்கு அவ்வெண் வகையும் நீங்கி இவ்வெண் வகையும் அங்கீகரிக்க வேண்டுமென்பது இதனுட்காண்க.(46)

47. போற்றி நீறணிந் துருத்திர சாதனம்
பூண்டிடைந் தெழுத்துள்ளே
சாற்று நீகுரு வாதிமூ வுருவையும்
தாழ்ந்திறைஞ் சிவைசெய்தால்
மாற்ற லாம்பிறப் பிறப்பினை நெஞ்சமே
மன்றுளா டியதாளும்
தோற்றும் உள்ளொளிக் குள்ளொளி யாயதைத்
தொழுதுவாழ் தலுமாமே.

போற்றி நீறணிந்து உருத்திரசாதனம் பூண்டிடுஐந்தெழுத்துள்ளே சாற்று. நீகுரு ஆதி மூவருவையும் தாழ்ந்து இறைஞ்சு இவை செய்தால். எ-து. மெய்ப் பொருளாகப்பேணி விபூதியை நிறையப்புனைந்து உருத்திராக்கங்களைச் சிரசாதி தானங்களில் தரித்து பஞ்சாட்சரத்தை மானதமாய் உச்சரி. குருலிங்க சங்கமமாகிய மூன்று வடிவையும் தாழ்ந்து வணங்கு. இங்ஙனம் இவற்றை நாள்தோறும் நீ மறவாது செய்தியானால்,—மாற்றலாம் பிறப்பு இறப்பினை நெஞ்சமே. எ - து. நெஞ்சமே பிறப்பினையும் இறப்பினையும் மாற்றிக் கொள்ளலாம்.—மன்றுளாடிய தாளும் தோற்றும் உள்ளொளிக் குள்ளொளியாய் அதைத்

---

1. பெண்ணுடை யாபரணம் பெய்தயிலம் தாம்பூலம் உண்ணலணை சந்தனத்தோ டோரெட்டும் - விண்ணவர்க்கா யாகாத நஞ்சுண்ட வண்ணலடியார் தமக்கிங் காகாதீ சொன்னே மறி.

தீர்த்தம் பிரசாதம் திருநீறஞ் சக்கரமும்
சாற்றுமிறை கட்பிறந்த தாழ்வடமும் - போற்றுங்
குருலிங்க சங்கமமுங் கொள்குறிக ளெட்டாங்
கருவகலச் கட்டுரைத்தேங் காண்.



தொழுது வாழ்தலுமாமே. எ-து. அஃதன்றிக் கனகசபைக்கண் நடிக்கின்ற சிவனது திருவடியும் உயிராகிய உள்ளொளிக்கு உள்ளொளியாய்த் தோன்றும் அத் திருவடியைத்தொழுது அவ்விடத்து எக்காலமும் அழிவின்றி வாழவுங் கூடும் எமக்கு என்று விவேகங் கூறிற்று. எ - று.

உயிர்களினது மும்மலங்களையும் நீக்கும் பொருட்டுச் சிவன் தனது அருளால் குருலிங்க சங்கமமாய் வடிவு கொள்ளுதலின் மூவுருவையும் தாழ்ந்திறைஞ்சு என்று கூறப்பட்டது. தாழ்ந்து இறைஞ்சுதல் மனத்தில் அன்பும் வாக்கில் இன்சொல்லுமாகக் காயத்தால் வணங்குதல். வீடடைவோர்க்குச் சிவம் முன்னுகை அருளே நாவாக பஞ்சாட்சரத்தைச் செபியாமல் செபிக்கவேண்டுமாகலின் ஐந்தெழுத்து உள்ளே சாற்று என்று கூறப்பட்டது. இங்ஙனம் பஞ்சாட்சரம் உச்சரித்தால் சகல கேவல மறுமாகலின் பிறப் பிறப்பினை மாற்றலா மென்றும் சகல கேவலங்கள் அறவே புடம்போட்ட பொன்போல உயிர் ஒளி விடுமாகலின் உயிரை உள்ளொளி என்றும் இவ்வுயிர்க்கும் உள்ளொளியாய்த் திருவருள் தோன்றலின் மன்றுளாடியதாளும் உள்ளொளிக் குள்ளொளியாய்த் தோன்றும் என்றும் கூறப்பட்டன. அதைத் தொழுதலாவது தற்போதம் சீவியாது நிற்றல். அங்ஙனம் நிற்கவே பேரின்பம் தோன்றுமாகலின் வாழ்தலும் ஆம் என்று கூறப்பட்டது. (47)

48. வாழ லாம்அரன் புகழின மலர்கவி
மாலைசெய் தவன்றாளில்
வீழு மாறுபொன் னிதழிசேர் தோள்களின்
மீதணிந்தினி நெஞ்சே
தாழு வாய்அரி தேடுபொற் சரணமே
சரணமென் றிது வன்றிப்
பாழி லேகருங் காக்கைபோற்
கதறினுள் பலகழித் தொழியேலே

வாழலாம் அரன் புகழ் இன மலர்கவி மாலை செய்து அவன் தாளில் வீழுமாறு பொன்னிதழி சேர் தோள்களின்மீது அணிந்து இனி நெஞ்சே தாழுவாய் அரிதேடு பொன் சரணமே

சரணமென்று, எ - து. நெஞ்சமே அத் திருவடியை அடைந்து வாழலாம் சிவனது புகழினமாகிய மலர்களாலே பாவாகிய மாலைகளை வணைந்து திருவடி மீதிற் பொருந்துமாறு பொன் போன்ற கொன்றைமாலை பொருந்திய புயங்களின்மீது தரித்து வணங்குவாய், அரியாலும் தேடப்பட்ட பொன்போன்ற திருவடியே புகல் என்று—இதுவன்றிப் பாழிலே கருங்காக்கை போல் கதறி நாள் பல கழித்து ஒழியேலே; எ - து. இங்ஙனம் செய்வதன்றிப் பாழிலே கருங்காக்கைபோல் உலக நூல்களைக் கற்றுக் கதறிப் பல நாள்களை வீணிலே கழித்து நாசமாகாதே என்று விவேகங் கூறிற்று. எ - று.

புகழ் பலவாகலின் புகழினம் என்றும் அதனைப் பாவிற் சேர்த்துக் கூறுதலின் மலர் என்றும் கூறப்பட்டது. துட்ட நிக்ரகம் பண்ணுகின்ற புயத்தையும் சிட்ட பரிபாலனம் பண்ணுகின்ற பாதத்தையும் புகழ்தலின் தாளின் வீழுமாறு பொன்னிதழி சேர் தோள்களின் மீதணிந்து என்று கூறப்பட்டது. மலசங்காரம் பண்ணுகின்ற வெற்றியையும் இன்பத்தைக் கொடுக்கின்ற கிருபையையும் என்றும் ஆம்.

பொன்னிதழி சேர் தோள்களின் மீதணிந்து என்பதற்கு உதாரணம் :—கந்தரனுபூதி.

[1] இல்லே யெனுமா யையிலிட்ட டனை நீ
பொல்லே னறியாமை பொறுத் திலேயே
மல்லே புரிபன் னிரு[2]வா குவிலென்
சொல்லே புனையும் சுடர்வே லவனே.

மற்றும் வருவனவற்றுற் காண்க. (48)

**49.** ஒழித்தி டும்பவப் பகைவிரைந் துள்ளமே
யோதுமூ துணர்வோர்முற்

---

1. யாமா - சா. மாயா - யாது ஆராய்ந்தால் இல்லாமற் போகுமோ அது மாயை எனப்படுதலின் இல்லே எனும் மாயை எனப்பட்டது.

2. வாகு - பாகு - புயம்.



பழிச்சு பாடலை யரற்கவை விடர்க்கிளம்
பாவைய ருரைபோலும்
கழித்தி டேலுப சாரமென் றிதனைநீ
கட்டுரையெனக் கொள்வாய்
விழித்து மாரனை யெரித்ததே ! வருள்பெறும்
விருப்பினர் விருப்பீதே.

ஒழித்திடும் பவப்பகை விரைந்துள்ளமே ஓது மூதுணர்வோர் முன் பழிச்சு பாடலை. எ - து. பிறவியாகிய பகை அதிக சீக்கிரமாக ஒழிந்துபோம். மூவர், மாணிக்கவாசகர் முதலிய பேரறிவினையுடையோர் முன்னுளிலே தோத்திரம் பண்ணிய பாடலை நெஞ்சமே நீ தோத்திரம் பண்ணுதி,—அரற்கு அவை விடர்க்கு இளம்பாவைய ருரைபோலும், எ - து காமுகர்க்கு இளமைத் தன்மையினையுடைய பாவைபோல்வார் கொஞ்சிக்கூறும் வசனம்போல அத்தோத்திரங்கள் சிவனுக்குப் பிரீதியாய் இருக்கும்,—கழித்திடேல் உபசாரம் என்று, இதனை நீ கட்டுரை யெனக் கொள்வாய். எ - து. இங்ஙனம் கூறிய மொழியை உபசார மொழியென்று கருதி நீ விடாதே உறுதி மொழியென்று அறிந்து கொள்வாய்,—விழித்து மாரனை எரித்ததே அருள்பெறும் விருப்பினர் விருப்பு ஈதே. எ - து. நெற்றிக்கண் விழித்து மன்மதனை யெரித்த கடவுளது திருவருளைப் பெறும் விருப்பத்தினையுடைய மெய் அடியாரது விருப்பமும் இத் தோத்திரங்களே யென்று விவேகங் கூறிற்று. எ - று.

ஒழிந்திடும் என்பது ஒழித்திடும் என்று வந்தது. பவத்திற்குக் காரணமாகிய இரு வினைகளையும் பவமென்று காரணத்தைக் காரியமாக உபசரித்துக் கூறினர்,

இதற்கு உதாரணம்: திருவள்ளுவ நாயனர்.

[1]இருள்சே ரிருவினையும் சேரா விறைவன்
[2]பொருள்சேர் புகழ்புரிந்தார் [3]மாட்டு.

மற்றும் வருவனவற்றுற் காண்க. (49)

---

1. இருள்—அவித்தை. 2. பொருள்—மெய்ம்மை.
3. மாட்டு—இடத்து.

50. விருப்ப மாயிது கேட்டிநன் னெஞ்சமே
விமலனுக் காளல்லார்
பொருப்பை நேர்தனம் சொரியினும் அவர்கணோர்
புன்னுனித் துணையன்பும்
திருப்பி டேலரன் றொழும்பர்தம் தொழும்பனாய்த்
திரிந்தவர் பணிசெய்தீண்
டிருப்பை யேன்மிக நல்லையிச் சொல்லைநம்
பில்லையேல் பொல்லாயே

விருப்பமாய் இது கேட்டிநல் நெஞ்சமே. எ - து. நல்ல நெஞ்சமே இந்த வார்த்தையைச் சந்தோசமாகக் கேட்பாயாக. —விமலனுக்கு ஆள் அல்லார் பொருப்பை நேர்தனம் சொரியினும் அவர் கண் ஓர் புல் நுனித்துணை அன்பும் திருப்பிடேல், எ - து. நிர்மலனாகிய சிவனுக்கு அடிமையல்லாதவர் பொன் மேருவைப் போலும் தனங்களைச் சொரிந்தாராயினும் அவர்களிடத்துப் புல்லினது நுனி மாத்திரமாயினும் அன்புவைத்திடேல்—அரன் தொழும்பர் தந் தொழும்பனாய்த் திரிந்து அவர் பணிசெய்து ஈண்டு இருப்பையேல் மிக நல்லை எ-து. சிவனது அடியார்க்கு அடியானாகித் திரிந்து அவரது பணிவிடைகளைச் செய்து இவ்விடத்து இருப்பாயாகில் எமக்கு மிகவும் நன்மையினையுடையை நீ,—இச்சொல்லை நம்பு இல்லையேல் பொல்லாயே. எ - து. யான் இங்ஙனங் கூறிய சொற்களை உண்மையாக நம்பு இவைகளை நம்பாது ஒழிதியேல் எனக்கு நீ பொல்லாய் என்று விவேகங் கூறிற்று. எ - று.

இதற்கு உதாரணம்: திருநாவுக்கரையர்.

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத்தருவரேனும்
மங்குவாரவர் செல்வம் மதிப்போம் அல்லேம்
மாதேவர்க் கேகாந்த ரல்லராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில்
அவர்கண் டீர்யாம் வணங்குங் கடவுளாரே.

மற்றும் வருவனவற்றாற் காண்க.

(50)

வைராக்கிய சதகத்தின் முற்பாதியாகிய சாத்திரம் முற்றிற்று.

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தாள்மலர் வாழ்க.

———



## வைராக்கிய சதகம்

### தோத்திரம்

மனம் தானுமன்று தன்வயமும் அன்று என்று அறிந்து அதனை விடுத்துத் தன்னையும் அதனையும் கூட்டவும் பிரிக்கவும் வல்ல சிவத்தை நோக்கி மேல் விவேகம் கூறுகின்றது.

பொல்லாத என்னெஞ்சம் ஓரைந்து புலன்கள் தம்பால்
அல்லாது அரை மாத்திரையும் நின்னடிக்கண் அன்பாய்
நில்லா திதற்கென்னை செய்கேனிதை நின்றிடென்றே
சொல்லாய் திருத் தில்லையுள் மேவிய சோதிநீயே 1

என் நெஞ்சமானது ஐந்து புலன்களிலல்லாமல் அரை மாத்திரை நேரமும் உன் திருவடியிலே அன்புடன் நில்லாது; நிற்கும்படி சொல் என வேண்டுகின்றார்.
என்னை செய்கேன் - என்ன செய்வேன்.

நீயேயருள் செய்யினல்லாது பொய்நெஞ்ச வஞ்சத்
தீயேனுனை வந்தடைதற் கொரு செய்கை காணேன்
பேயேனுமுனைத் தொடரும்படி பேசுதில்லைத்
தூயோய்ஒரு (உ)பாயம் விடாதினிச் சூழ்ந்து நின்றே 2

நீ அருளினால் அன்றி யான் உன்னை அடைய வேறு வழி காணேன். உன்னையான் விடாது நினைக்க ஒருவழி சொல்லுக. சூழ்ந்து நின்று தொடரும்படி உபாயம்பேசு எனக் கூட்டுக.
சூழ்ந்து - தியானித்து

நின்றாய் திருத் தில்லையுளாய் என்றன் நெஞ்சினுள்ளே
என்றானும் எனக் கதிதூர மதாயிருந்தாய்
ஒன்றாலும் உனைத் தொடர்கிற்கும் உபாயம் காணேன்
மின்தாழ் சடையாய் தமியேற்கு விளங்கிடாயே, 3

என் நெஞ்சின் உள்ளே (அருகில்) இருக்கின்றாய். ஆனாலும் உன்னை யான் அணுகமுடியாமல் தூரத்தில் இருக்கின்றனை. தமியேன் - துணை இல்லாதவன்.

விளங்கும் எழிற் பேதையர் காதல் விடாதயான் அக்
களங்கம் அறுவோர் தொழும் நின் கழல்காணு மாறென்
துளங்கும் ஒளித் தூமதி சூடிய தோன்றலே யென்
உளங்கொண்டிடு நீயினிக் கோயிலதா உவந்தே 4

மாதர் காதல் ஆகிய களங்கம் அற்றவர் தொழும் திருவடி. களங்கம் - குற்றம். நீ என் உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டால்தான் மாதர் மயக்கம் நீங்கும்.

வந்தித்திடுவார் பவநோய்க்கு மருந்(து) அ(ன்)னேயைச்
சந்தித்திடுவான் மறித்தால் மனந்தப்பி யப்பால்
இந்தப்புவியும் கடலும் கடந்தேகும் என்றல்
எந்தப்படி யுய்வதுயான் தில்லை எம்பிரானே. 5

எம்பிரான் பிறவி நோய்க்கு மருந்து போன்றவன். மருந்து அ(ன்)னேயை - மருந்து போன்ற உன்னை. மறித்தால்-தடுத்தால், எந்தப்படி - எப்படி.

பிரானேதிருத் தில்லையுளாய் அன்(று)இப் பேதையேன்முன்
ஓரானேறிவர்ந் தம்பிகையோ டெளிதோடி வந்தாய்
வரானே இனம் எம்மிறை என்றுனை நாடிவாடி
இரா நாயடியேற் கெதிர்தோன்றிலை இன்றி தென்னே 6

இத் திருப்பாட்டினல் சுவாமிகள் இறைவனை ஊனக்கண்ணுலும் காணும் பேறு பெற்றவர் என்பது வெளியாம். ஆன் ஏறு இவர்ந்து - இடம் ஏறி. இரா - இருக்கின்ற.

என்னுயகனே இமையோர்தொழும் ஈசனேசெம்
பொன்னர்திரு வம்பலத் தாடிய பூதநாதா
உன்னு ரருளால் இனிவீட்டிடை உய்த்தி இன்றேல்
பின்னர் உயக்கொள்ள வ(ல்)லாரென் பிழைகள் தீர்த்தே. 7

பூதநாதன் - ஆருயிர்கட்குத் தலைவன். இறைவன் அருளினுல் அன்றி வீடுபேறு கிடையாது என்பது கருத்து. ஆர் அருள் - அருமையான நிறைந்த அருள்.



தீராத ஓரைம்புலச் சேட்டையும் தீர்ந்துபோய் வெங்
கூரார் மழுவாளி நின்பாதம் குழைந்து போற்றி
நீராயுருகித் தொழுதுன்னெ திர் நிற்கும் வண்ணம்
ஓர்நாள் உளதோ தமியேற்கும் உரைத்திடாயே. 8

சேட்டை - குறும்பு. கூரார் மழுவாளி என்றது ஐம்புலக் குறும்பினை அழிக்க வல்லவன் என்ற குறிப்பு.

உரையேன் நனி வாய்திறந்துன் புகழ்தன்னை நாளும்
விரையார் மலரிட் டருச்சிக்க விருப்பு மில்லேன்
கரையேன் உளம் நின்னினைந்து எத்திறத்தால் கடப்பேன்
திரையார் வினையார் பிறவிக்கடல் தில்லையானே 9

நாளும் உன் புகழை உரையேன், உன்னை அருச்சியேன், நினையேன், எவ்வாறு பிறவிக்கடலைக் கடப்பேன். இச் செய்யுள் பிறவி நீக்க வழி கூறுகின்றது. திரையார் வினையார் பிறவிக்கடல் - அலைபோல வினைகளைத் தோற்றுவிக்கும் பிறவியாகிய கடல்.

ஆனேறிவர்ந் தென்னெதிரே விரைந்தன்று வந்தோய்க்கு(கு)
ஏனேவெறுப்பு(பு) இப்பொழுதோர் சற்றிரங்கு கில்லாய்
நானே அறிவேன் உன்பெருமையை நம்பனே நீ
தானே பொறுத்தாளு கண்டாய் என்தவறெலாமே. 10

வந்தோய்க்கு - வந்தவனாகிய உனக்கு. 'இப்பொழுது வெறுப்பு ஏனோ' என இயைக்க.

எல்லா மறிவோய் அறிந்தே வகுத்திட்டவாறே
அல்லால் தமியேனும் புரிவதொன்றில்லை யானல்
பொல்லாமை செய்வித்தவன் நீ பொறுப்பானும் நீ கல்
வில்லாய் இளைத்தேனைப் பவத்தினி விட்டிடேலே. 11

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்ற தேவாரத்தை இப்பாட்டு நினைப்பிக்கிறது. கல்வில்லாய் - மேரு மலையாகிய வில்லையுடையவனே. பவம் - பிறவி.

ஏலக்குழலார் அநுராகம தென்னும் மாயா
சாலக்குள் நைந்தேற் குனதின்னருள் தந்து காப்பாய்
நீலக்கள! மால் அயனேடு முன்னேடி வாடும்
மூலக்கனலே கனலேந்து கைம்முக்கணனே. 12

ஏலம் - மயிர்ச்சாந்து. அநுராகம் - காதல். மாயா சாலம்-மாயவலை. நீலக்கள - திருநீலகண்டனே. தேடி - தேடி. மூலக்கனல் - ஆதியாகிய சோதி.

கண்ணார் நுதலோய் கடையேனையும் ஒன்றதாயே
எண்ணு அருள் அன்று சுரந்துனைக்(கு) இன்(று) இலாதென்
விண்ணோரிறை யோய்க்கும் உண்டோசொல் வெறுப்பினேடு
தண்ணார் விருப்பும் கரிப்போர்வைய சாற்றிடாயே. 13

கண்ணார்நுதலோய் - நெற்றிக்கண்ணனே. ஒன்றதாய்(ஏ) எண்ணு - ஒரு பொருட்டாகக் கருதி. அருள் சுரந்து உனைக்கு-அருள் சுரந்தவனுகிய உனக்கு. இறையோய்க்கும் - இறைவனுகிய உனக்கும் வெறுப்பும் விருப்பும் உண்டோ சொல் என இயைக்க. கரிப் போர்வை - யானைத் தோலாகிய போர்வை யாளனே.

சாற்றுய் திருத்தில்லை யுள்ளாய் சிவசங்கரா வெண்
ணீற்றுய் கடையேன் உயுமாறென்றன் நெஞ்சுள் அஞ்சிப்
போற்றுதிருந்தேன் வருந்தாமல் என் புத்திதன்னைத்
தேற்றுய் ஒரு நீ இனி அன்பினைச் செய்யுமாறே. 14

பிறவிக்கு அஞ்சாமலும் உன்னைப் போற்றுமலும் இதுவரை இருந்தவனுகிய நான் இனியேனும் யான் உய்யும்படி உனக்கு அன்பு செய்யும் வழியைச் சொல். வருந்தாமல் என் புத்தியைத் தெளியச் செய்,

மாருய ஓரைந்து புலன்வலி மாய்ந்து நெஞ்சை
நீருர்திரு மேனிய உன்கண் நிறுத்த மாட்டேன்
ஏருத பவக்கடல் ஏறவும் எண்ணி நைந்தேன்
கூருயென தெண்ணம் எவ்வண்ணம் கைகூடுமன்றே. 15



மாறு ஆய புலன் - பகையாகிய புலன்கள். பிறவிக் கடலைக் கடப்பதற்கு நெஞ்சினை இறைவன் திருவடியில் வைக்க வேண்டும். அதற்குப் புலன்களை அடக்கவேண்டும் அதற்கு இறைவன் திருவருள் வேண்டும். அன்றே என்பது அசை.

அன்றே தமியேற் கெளிமானுடனுகி நீ வந்(து)
உன்தாள்கள் அளித்தனை பெற்றும் ஒன்றும் பெருரின்
நின்றேனலது ஐம்புலன் என் வசம் நின்றதில்லை
இன்றே(து) அவற்றைக் கொல்உபாய மொன்றீசஎற்கே. 16

இறைவனே மனித வடிவில் குருவாகி வந்து ஆட்கொள்கின்றன். எளிமானுடனுகி - எளியமனித வடிவங்கொண்டு. ஒன்றும் பெருதவர் போல இருக்கின்றேன். அலது - அல்லாமல். அவற்றைக் கொல்(லும்) உபாயம் இன்று ஓது என இயைக்க.

எற்கோ உனதன்பு மனத்தி(ல்)லை என்றன் நெஞ்சம்
கற்கே நிகராய திக்கல்லை நீ கல்லை வில்லா
முற்கால் வளைத்தாங்கு வளைத்தன் பின் மூழ்குவிப்பாய்
சிற்கோல சிதம்பர நாயக தேவ தேவே. 17

எற்கு - எனக்கு. முற்கால் - முன்காலத்தில். சிற்கோலம் - அறிவுஉரு. கல்லை வில்லாக வளைத்த இறைவனுக்கே மனக்கல்லையும் வளைக்கமுடியும் என்றவாறு.

தேவேயுனை யன்பினிற் பூசை செய்தேனுமல்லேன்
நாவால் மிகப்பாடி நின்றுடி நயக்குகில்லேன்
ஓவாதுழல் தீமனத் தோடிவண் உற்றுளேன் மற்(று),
ஆ ஆ இனி என் வரும் என்பதறிந்திலேனே, 18

கையால் இறைவனை பூசை செய்தல், நாவால் பாடுதல், மனத்தால் நினைத்தல் மனிதன் கடமை. இல்லையேல் அவன் கெடுவான் என்பதற்கு அது அறிகுறி, ஓவாது - இடைவிடாமல் உழல்தீமனம் - அலையும் கெட்ட நெஞ்சம்.

அறியாமையிற் கீழவர்பல் பிழையாற்றினும்
குறியாதருள் செய்வது மேலவர் கொள்கையன்ரே
மறியார் கரத்தோய் சிறியேன்வினை மாற்றியாளப்
பொறியேல் உனக்கென் முகமன் சொலப் பொய்யனேனே. 19

கீழோர் பிழை செய்வதும், மேலோர் அதனை மன்னித்து அருள்வதும் அவர்களுக்கு இயல்பு. ஆதலால் என் தீவினையை நீக்கி ஆள்வது உனக்குக் கடமையென்ருர். மறி-மான் கன்று. பொறியேல் - முறைமையாகுமானுல் ஏல் - எனின் என்பதன் மருஉ. முகமன் - உபசார வார்த்தை.

பொய்யற்றவர் வந்தடையும் பரிபூரணு இம்
மெய்யற்ற எற்கு நின் அலால் நிலைவேறும் உண்டோ
தையற்கிடமே இடமா அருள் தாணுவே என்
மையல் தவிர்ப்பான் உன்கடாட்சம் வழங்கிடாயே. 20

பரிபூரணு - எங்கும் நிறைந்தவனே. இடமே இடமா அருள் தாணுவே - இடப் பாகத்தினையே வாழும் இடமாக அருளிய சிவனே. தாணு - அசையாதவன். மையல்-மயக்கம் தவிர்ப்பான் - நீக்கும் பொருட்டு.

வழங்(கு)எற்கிவண் ஏதுசெய்தால் எதுவாகும் என்றென்(று)
எழுங்கற்பனையாவும் இறந்து உணர்வு ஏகமேயாய்
ஒழுங்கிற் புலனுதியு பாதி ஒழித்து ஒரு(உ)ன்னைச்
செழுங்கைக் கனியொத்(து) உணரும்படித் தில்லையானே. 21

தில்லையானே கற்பனையாவும் இறந்து, ஏகமே ஆய், உபாதி ஒழித்து உன்னைக் கைக்கனி ஒத்து உணரும்படி எனக்கு வழங்கு என இயைக்க. எற்கு - எனக்கு. கற்பனையாவும் இறந்து-கற்பனைகளைக் கடந்து ஏகமே ஆய் - காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்பன இல்லாமல் ஒன்றேயாகி. உபாதி - தடை. கைக்கனி - உள்ளங்கை நெல்லிக் கனி.



தில்லைப்பதிமேய சிவப்பிரகாசனேயோ
தொல்லைப் பிறவா நெறிமேவிய தோன்றலேயோ
அல்லற் பிறவிக்(கு) இளைத்தேன் தனை அஞ்சலென்ருர்
சொல்லைப் பகராய் விடைமீதினம் தோன்றி நின்றே 22

தில்லைச் சிவப்பிரகாச சுவாமிகள் என்பார் சுவாமிகளின் ஞானசிரியர். பிறவாநெறி-திருப்பேரூர். சிவபெருமானே ஞானசிரியராக வருவர் என்பதறிக. அல்லல் - துன்பம். அஞ்சல் - அஞ்சாதே.

தோன்ருத் துணையே புணையே பவத்தொல் கடற்கென்
போன்ருர்க்கு மிரங்கு மருட்பெரும் போதமே இங்(கு)
ஈன்ருர் மனையாதிய மோகமெலாம் விடுத்(து)உள்
சான்ரும் உனையே வினையேன் இனிச்சார எண்ணே. 23

பவ தொல் கடற்குப்புணையே-பிறவியாகியபழையகடலைக் கடப்பிக்கும்தெப்பமே. போதம்-அறிவு. உள்சான்று-சீவசாட்சி.

சார்ந்தாய் குருவாதியவாய் விடைதன்னில் வந்தாய்
கூர்ந்தாய் அருளிற் பிறவாநெறி கூட்டுவித்தாய்
ஓர்ந்தேன் குறையின்றெனினும் குறையுண்டு கண்டாய்
பேர்ந்தோடும் என் நெஞ்சுள் உன்னன்புபிறக்குமட்டே. 24

குரு ஆதிய ஆய்ச் சார்ந்தாய் - குருலிங்க சங்கமம் என்ற திருவுருவாகி என்னைச் சேர்ந்தாய். விடை-காளை. அருளின் கூர்ந்தாய் - மிக்க அருள் செய்தாய். பிறவா நெறி - வீடுபேற்றுக்கு வழி. ஓர்ந்தேன்-அறிந்தேன். பேர்ந்து ஓடும் நெஞ்சு-நிலையின்றி அலைகின்ற மனம். நெஞ்சுள் உன் அன்பு பிறக்கு மட்டும் குறை உண்டு என இயைக்க.

பிறவாநெறியாகிய தோர் திருப்பேரையாளஎம்
உறவேயறவே தவிர்ந்தென்மனம் ஓடிவாடிப்
புறவாதனை பற்றி வளர்ந்திடுபுன்மை யாலின்(று)
இறவே அதனைப் புரிவான் உளத்தெண்ணுவாயே. 25

என் மனம் எம் உறவே அறவே தவிர்ந்து புறவாதனை பற்றி வளர்ந்திடு புன்மையால் அதனை இறவே புரிவான் எண்ணு வாய் என இயைக்க. அறவே தவிர்ந்து - முற்றிலும் விட்டு, வாதனை - வாசனை. இறவே - அழியவே.

எண்ணும் வடிவே தினிநீ புனைந் தெய்தினுலும்
திண்ணம் என் அவா அகலா அச்சிதம் பரத்தே
நண்ணும் உனதுண் மையைக் காண நயந்துளேன் என்
உள் நின்று அதைக்காட்டு தற்குஈச சற்றுன் னுவாயே. 26

ஈச நீ இனி...ஏது வடிவு புனைந்து எய்தினுலும் திண்ணம் (ஆக) என் அவர் அகலாத அச் சிதம்பரத்தே நண்ணும் உன் உண்மையைக் காண நயந்துள்ளேன்; என் உள் நின்று அதைக் காட்டுதற்குச் சற்று உன்னுவாய் என இயைக்க.

உன்னும் உணர்வுக் குணர்வாய் எனக் குண்மைதந்தாய்
மன்னும் சுருதிப் பொருளாய் வழி காட்டி நின்ருய்
பின்னும் குருவா யடைந்துன் னருள்பேண வைத்தாய்
என்னென் றுரைப்பேன் நின் கருணை இருந்தவாறே. 27

இறைவன் செய்த கருணையை வியந்து பாராட்டுகின்ருர். அறிவுக்கு அறிவாய் நின்று உண்மை உணர்த்தல், வேதம் பொருளாகி வழிகாட்டி நிற்றல், குருவாகி வந்து உபதேசித்தல் ஆகிய இவை இறைவன் செய்த கருணையாம், சுருதி - வேதம்.

இருந்(து) ஒருமிடத் துணர்வில்லை மாயைக்(கு) இதன்பால்
பொருந்தா விடத்தில்லை உயிர்க்கொரு போதமேனும்
திருந்தா இவைகொண்டிறை ஐந்தொழில் செய்தியென்றே
வருந்தா அருள் முன்னிலை தன்னை மதித்துயானே. 28

மாயைக்கு உணர்வு இல்லை. இதன்பால் பொருந்தா இடத்து உயிர்க்கு ஒரு போதமேனும் இல்லை. இவை கொண்டு ஐந் தொழில் செய்தி என்றே (அறிந்து) முன்னிலை தன்னை மதித்து யான் வருந்தா(மல்) அருள் என இயைக்க. போதம் - அறிவு. திருந்தா - செப்பமில்லாத. முன்னிலை - நன்மை தீமை செய்த உயிர்கள்.



மதித்தென் பருவத்தளவில் குருவாதியாகி
உதித்துள்ளறி வோங்கும் வகைக் குபாயம் செய்தோயை
எதிர்த் திங்ஙனம் சற்குரு சற்குரு என்று நைந்தும்
துதித்தும் திரியா எனக்கின்னருள் தந்து தோன்றே. 29

மதித்து - தகுதி அறிந்து. குரு ஆதியாகி - குரு. லிங்கம் சங்கமம் ஆகி. உபாயம் - வழி.

தோன்ருமல் முனிந்தொரு தாய் வயின் தோன்று பாலர்
ஈன்ருள் தனைத் தம்மின் வேருக்கொடி கழ்ந்தவாபோல்
பூன்ருவொரு நீயருளால் புனை மேனியெல்லாம்
யான்ருன் பலதெய்வம் எனக்கொடி கழ்ந்தவாறே. 30

மூர்த்தி வேறுபாடு பற்றித் தெய்வ நிந்தனை செய்தல் வேண்டாமென்று உணர்த்தியவாறு, ஒருதாய்வயின்தோன்று பாலர் (அவ்வுண்மை) தோன்ருமல் தம்மின் (தாய்) வேறு வேருகக் கொ(ண்)டு (அவளை) இகழ்ந்தவா(று)போல என இயைக்க. முனிந்து-சினந்து, வெறுத்து. பூன்ரு-பிறவாத.

இகழும் பொருளொன்றிலை மண்முதலெட்டும் எந்தாய்
நிகழுன் வடிவே யெனத் தேர்ந்துளம் நெக்குநின் தாள்
புகழும்படியேயினி யீச வென்புத்தி தன்னைத்
திகழும்படி செய்தி திரோபவம் செய்திடேலே. 31

மண்முதல் எட்டும். உன் வடிவே - நிலம். நீர், நெருப்பு, காற்று, வான், இரவி, மதி, இயமானன் என்ற எட்டும் உனது திருவுருவமே. திரோபவம் - மறைப்பு.

செய்யாய் கரியான் தொழும் வெள்ளிளஞ் சேவையூர்வோய்
வையார் மழுவோய் திருவுள்ளம் இவ்வஞ்சனேனும்
ஐயாவிழி பெய்வுற நீர்பெரிது அன்பினேடு
கையால் தொழுதேத்திநின் கூத்தினைக் காணுமாறே. 32

சேவை ஊர்வோய், மழுவோய், ஐயா, விழிநீர் பெய்வுற அன்பினேடு ஏத்தி நின் கூத்தினைக் காணுமாறு திருவுள்ளம் செய்யாய் என இயைக்க. கரியான் - திருமால். வெள் இளம் சே - வெண்மையான இளைய விடை, வை ஆர் — கூர்மை பொருந்திய.

காணுத பவக் கடலின் கரை காண எற்குக்
கோள்நாகணி மார்ப மெய்யன்பு கொடுத்தியென்றே
நாணுதிசைத் தேன் திருக்காளத்தி நாத உன்தாள்
பேணுதவலக் கடல் மூழ்கிய பேதையேனே. 33

காணுத - காணமுடியாத, பவக் கடல் - பிறவிக்கடல். கோள் நாகம் அணி மார்ப-கொலைசெய்யும்பாம்பினை அணிந்த மார்ப. கொடுத்தி - கொடுப்பாயாக. பேணுது - விரும்பாமல். அவலக் கடல் - துன்பக் கடல்.

பேதைக்கொரு பாகமளித்திடு பேரையா எம்
கோதைக்கு நின்தோளுறு கோதைகொடென்று நின்பால்
ஓதற்(கு) என் உளத்தை விடுத்தனன் ஓடிமாதர்
காதற்க(ள்)ளை உண்டமையால் உனைக் கண்டதின்றே 34

எம் கோதைக்கு எம் பெண்ணுக்கு. தோள் உறுகோதை- தோளில் பொருந்திய மாலை. மாதர் காதல் க(ள்)ளை - பெண்ணுசையாகிய கள்ளினை. இறைவன் திருவருளைப் பெற நெஞ்சினைத் தூண்டிலுைம் அது அதற்கு முயலாமல் பெண்ணுசையால் மறந்தது என்பதாகும்.

கண்டேன் களிகூர்ந்து சிவப்பிரகாச நாமம்
கொண்டோங் குருவோடிவ ணுற்றெனையாண்ட கோவே
பண்டேயொரு நீ வகுத்திட்ட படிக்குயானுன்
தொண்டாகி வந்தின்றுனைப் பாடத் தொடங்கினேனே. 35

ஓங்கு உரு - மேன்மையான திருவுருவம் பண்டு - முன்பு உன்னைக் கண்டேன் உன்னைப் பாடத்தொடங்கினேன் என்க.



தொடக்காயெனைச் சூழ்ந்துள ஐம்புலத் தோற்றமெல்லாம்
கெடக்கூறுதி நீயொரு சூழ்ச்சி கிளக்கிலாயேல்.
அடக்கா அவைஎன்ற னகத்துள் அடங்கு காறும்
கடக்கேன் பவவேலை எவ்வண் ணம்முக் கண்ணினனே. 36

தொடக்கு ஆய்-பிணைப்பு ஆகி. சூழ்ச்சி-உபாயம். ஐம்புலத் தோற்றம் எல்லாம் கெட ஒரு சூழ்ச்சி கூறுதி என இயையும். கிளக்கிலாயேல் - கூருய் எனில். அடங்கு காறும் அடங்கும் வரை. பவ வேலை எவ்வண்ணம் கடக்கேன்-பிறவிக் கடலினை எவ்வாறு தாண்டுவேன்.

கண்ணுல் மதனைப் பொடியாம் வகைகண்ட எண்தோள்
அண்ணு உயிர்யாவும் அளித்திடும் அப்பனேயோ
தண்ணுர் பொழில் தில்லையுளாய் எனக்கீது தாராய்
மண்ணுதிய ஆசைகளற்றுனை வாழ்த்துமாறே. 37

எண்தோள் - எட்டுத் தோள்.

வாழ்த்தேனுனை நாள்தொறும் வாழ்த்தவல்லோர்கள் தாளில்
தாழ்த்தேன் தலை ஆங்கவரேவல் தலைக்கொள்கில்லேன்
வீழ்த்தேன் நெடுங்காலம் அவத்தில் ஒண்மேருவில்லோய்
பாழ்த்தேன் கிளிபோல் பல நூல்கள் படித்தும்யானே. 38

உனை நாள்தோறும்வாழ்த்தேன், தாளில்தலைதாழ்த்தேன், ஏவல் தலைக் கொள்கில்லேன், நெடுங்காலம் அவத்தில் வீழ்த்தேன், படித்தும் பாழ்த்தேன் என இயைக்க. வாழ்த்தேன் - துதிக்கமாட்டேன். தாழ்த்தேன் - வணங்கமாட்டேன். வீழ்த்தேன் - வீழச் செய்தேன். பாழ்த்தேன் - பாழ்படுத்தினேன்.

யானுநடற் கின்பதுன்பங்களை எண்ண எண்ணித்
தானே சிறுபாலரின் என்மனம் சஞ்சலிக்கும்
மீனுபினன் பாலலது என்கண் விடுத்தி கொல்லோ
ஆனேறுடையாய் திதியாம் அதிகாரம் நீயே. 39

உடற்கு (வரும்) இன்ப துன்பங்களை எண்ண யான் யார்? என் மனம் (அவற்றை) எண்ணிச் சஞ்சலிக்கும் திதியாம் அதிகாரம் என்கண்விடுத்தி கொல் என இயையும். பாலரின் - குழந்தைகளைப் போல. சஞ்சலிக்கும் - அலைந்து திரியும். திதியாம். அதிகாரம்-காத்தல் தொழிலைச் செய்யும் ஆணை. மீனுயினன் பால் - மச்சாவதாரம் எடுத்த திருமாலின் பக்கல்.

காரார் மிடற்ருய் அளிசூழ் தருபொற் கடுக்கைத்
தாரார் புயனே சிவகாம சவுந்த ரிக்கோர்
சீரார் மணவாள என்றன்குல தெய்வமே நீ
பாராய் கடைக்கண் எனதெண்ணம் பலிக்க வின்றே 40

கார் ஆர் மிடற்ருய் - கருமை பொருந்திய கழுத்துடையவனே. பொற் கடுக்கைத் தாராய் - பொன்னிறமான கொன்றை மாலையாய். அளி - வண்டு

இன்றென்னை செய்கேனென நாடியிருந்த தீயேற்(கு)
*ஒன்றெய்தினெவ் வண்ணம் அறும்அதை ஓதுவேனே
அன்றன்னமும் ஏனமும் ஓர்வரும் ஐயநின் தாள்
ஒன்றன்பர் குழாத்துற வீதருளா யுவந்தே. 41

என்ன செய்கேன் - (உய்வதற்கு) யாது செய்வேன். இது செயலற்றநிலை. தீயேற்கு - தீயவன் ஆகிய எனக்கு. ஒன்று எய்தின் - ஒன்று கிடைத்தால். அவ்வெண்ணம் அறும் - அந்தக் கவலை நீங்கும். அதை ஓதுவேன் - அந்த உபாயத்தைச் சொல்லுவேன். அன்னமும் ஏனமும் - அன்னமாகிய பிரமாவும் பன்றியாகிய திருமாலும். ஓர்வு அரும் - தேடுதற்கு முடியாத நின்தாள் ஒன்று அன்பர் குழாத்து உறவு - நின் திருவடியை இடைவிடாது தியானிக்கின்ற அன்பர்களின் கூட்டத்திற் கூடுதல். ஈது உவந்து அருளாய் என இயையும்.

* முன்னர் வந்த பதிப்புக்களில் 'ஒன்றெய்தினெவ் வண்ணமறும்' என்று பதிப்பிக்கப்பட்டுள்ளது. 'அவ்வெண்ணம் அறம்' என்றிருக்கவேண்டியது ஏடெழுதினேரால் அவ்வாறு பிறழ எழுதப்பட்டதுபோலும்.



உவந்தா யெனதைம்புலனும் இரிந்தோட வோர்நாள்
தவந்தான் சிறிதும் இலிபால் விடைதன்னில் மின்னே(டு)
இவர்ந்தேவர நாளும் விளங்கிலை என்னைகொல்லோ
அவந்தான் மிகுபாவியுன் லீலை அறிந்திலேனே. 42

தவந்தான் சிறிதும் இலிபால் விடை தன்னின்......வர ஓர் நாள் உவந்தாய் என இயையும். மின் - உமாதேவியார் நாளும் விளங்கிலை - நாள்தோறும் விளங்கிலை. அவம் - பயனில்லாமை.

அறியாமையில் கட்டுணலுற்றதென் ஆண்மை அத்தைப்
பிறியாது விடேனெனல் எந்தைபிரான் உன் ஆண்மை
குறியீதிருவர்க்கும் என்ருல் எனைக் கோபியேலே
செறிவாய் மலமே இறையோடிகல் செய்ததன்றே. 43

என் ஆண்மை அறியாமையில் கட்டுண்டது - எனது வீரம் கட்டுப்பட்டிருக்கின்றது. அத்தை......உன்றன் ஆண்மை - அந்த அறியாமையைப் பிரிக்காமல் விடேன் (கட்டாயம் பிரித்தே தீருவேன்) என்பது உனது வீரம். என் அறியாமைக்கும் உனக்கும் இது குறிக்கோள். கோபியேல் - சினவாதே. செறிவாய்......செய்தது - நெருக்கி மலமே இறைவனுகிய உன்னேடு பகை கொண்டுள்ளது. அன்றே என்பது அசை.

செய்விப்பன் வினைத்தொகை வெம்பவம் சேர்ப்பனுன்னை
உய்விப்பனேல் அச்சிவனுண்மையும் ஓர்வன்என்ருேர்
ஐவர்க்கெதிரே எனைநோக்கி அறைந்ததையா
மைவெற்பன ஆணவம் நீயதை மாற்றிடாயே. 44

ஆணவத்தின் கொடுமை கூறுகின்றது இச்செய்யுள். வினைத்......செய்விப்பன் - இருவினைக் கூட்டங்களை ஈட்டுவிப்பேன். வெம்பவம் - கொடும்பிறவி. உன்னை......ஓர்வேன் - உன்னைக் காப்பாற்றுவேன் என்ருல் அந்தச்சிவனது வீரத்தையும் பார்க்கின்றேன். ஐவர்க்கு எதிரே - ஞானேந்திரியங்களாகிய ஐந்து பேருக்கு எதிரே. அறைந்தது - அறைகூவிற்று மைவெற்பு ஆன ஆணவம் - அஞ்சன மலைபோன்ற ஆணவம்.

மாற்ருய் எனக் காணவ மாயையில் வந்துவந்தே
தோற்ருவுள கேவல மாதிய சுத்தமொன்றூ(டு)
எற்ருயவ ணேற்றியிரண்டறுத் தெங்குமாகிக்
கூற்ருவி கொள்பதத் தென்ஞுவியும் கொள்ளுவாயே. 45

ஆணவம் மாயையில் வந்து வந்து எனக்குத் தோற்ருஉள கேவலம் ஆதியமாற்ருய் என இயைக்க. ஆணவத்தால் கேவலமும் மாயையால் சகலமும் ஆகிய அவத்தைகள் தோன்றும். சுத்தம் ஒன்று ஊடு ஏற்ருய் - சுத்தாவத்தையில் என்னை வைப்பாயாக. அவண் - அங்கே. இரண்டு அறுத்து - நீ, நான் என்னும் இரண்டையும் நீக்கி, கூற்று.....கொள்ளுவாய் - யமன் என் உயிரைக் கொள்ள வரும்போது நீ என்னை உன்னுள் ஆக்கிக் கொள்க.

கொள்ளேனெனினும் எழுத்தைந்தும் உள்கோதுயாதும்
தள்ளேனெனினு முனைச்சார்தவம் சார்ந்திலாரை
விள்ளேனெனினும் எனை நீ கைவிடேல் விடேல்காண்
நள்ளாறுடையாய் அவிநாசி நயந்துளானே. 46

எழுத்து ஐந்தும் உள்கொள்ளேன் எனினும் என இயைக்க. கோது - குற்றம். விள்ளேன் – நீங்கேன். நள்ளாறு என்பது அவிநாசிப்பதியில் உள்ள ஆறு.

நயவாது தில்லாபுரியோய் உனை நாடி நாளும்
வியவாதுட லோடுறவென்றும் விடாதென் னுள்ளம்
கயவா துறுபோக மெலாம் இவைகண்டு வீடும்
பயவாதிதென்றே பயந்தேன் மிகப் பாவியேனே. 47

என் உள்ளம் உனை நயவாது என இயைக்க. நயவாது - அன்பு செய்யாது. உறுபோகம் எல்லாம் கயவாது என இயைக்க. கயவாது - வெறுக்காது. வீடும் பயவாது - வீடுபேற்றுக்கும் துணையாகாது.



பாவாற்பெரியோர் புகழ் சிற்றம்பலத் துளோயை
நாவாற்சிறியேன் துதிசெய்யுமிந் நன்கில் சொல்லும்
ஓவாதிரை யோருழை தாவியவுன் செவிக்கே
மேவாதல வென்று துணிந்து விளம்பினேனே. 43

பெரியோர் – திருஞானசம்பந்தர் முதலிய நாயன்மார்கள். ஓவாது இரை ஓர் உழைதாவிய - நீங்காமல் கத்துகின்ற ஒரு மானது அருகே பாய்கின்ற. மேவாது அல என்று-ஏருதது அல்ல என்று.

விளம்பற் கருஞ்சோதி யென்கோ விடையோனென்கோ என்
உளம்புக்க சிவப்பிரகாச னென்கோ என்னங்கைத்
தளம்பற்றிய சாந்தனென்கோ நின்றனது நாமம்
வளம் பெற்ற திருக்கைலாய சொல்வா யெனக்கே. 49

திருக் கயிலாய நின்றனன் நாமம் சோதி என்கோ என இயைக்க. என்கோ - என்று சொல்வேனே. அங்கைத் தளம் உள்ளங்கையாகிய இடம்

எனக்கீந்தினி யாண்டிடல் வேண்டும் எம்மீசனேமற்(று)
உனக்கே சரணம் சரணம் புலனேடும் என்றன்
மனக்கோதனைத்து மிறந்தோங் கறிவாகியாங்கே
பிணக் காண்பவன் காட்சியுமற்றவபேத வாழ்வே. 50

அபேத வாழ்வு எனக்கு ஈந்து இனி ஆண்டிடல் வேண்டும் என இயைக்க. மனக்கோது - மனக் குற்றம். அபேத வாழ்வு - இரண்டு அற்ற வீடுபேறு,

வைராக்கிய சதகம் தோத்திரமும், அருஞ்சொல்

விளக்கவுரையும் முற்றுப் பெற்றன.

உ

# வைராக்கிய சதகம்

## செய்யுள் முதற்குறிப்பு

### அகர வரிசை

உ

# வைராக்கிய சதகம்

## உதாரணச் செய்யுள் முதற்குறிப்பு

### அகர வரிசை